கல்கி

KALKI 19-5-91 ரூ. 2.50



# தேர்தல் சிறப்பிதழ்

நீங்கள் எண்ணும்
இளமைத் தோற்றத்தைப்
பெற...



கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய் கொண்டு
இப்பொழுது நீங்கள் எண்ணும் இளமைத்
தோற்றத்தைப் பெறலாம். அதன்
மேம்படுத்தப்பட்ட ஃபார்முலா உங்கள்
கேசத்திற்கு இயற்கையான தோற்றத்தை
அளித்து நீடிக்கச் செய்கிறது. மேலும்
இதை உபயோகிப்பது எளிது.

# கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்
# இப்பொழுது உயர்தரமான தொழில்நுட்பத்துடன்




கோத்ரெஜ் வழங்கும் உன்னதமான பவுடர் ஹேர் டைய்



பேருந்து ஓட்டும் முதல் பெண்:

# பெருமை உண்டு; வேலை இல்லை!

மொபட், ஸ்கூட்டர் , ஆட்டோ என்று முன்னேறி... தற்போது பேருந்து ஓட்டவும் புறப்பட்டு விட்டார்கள், பெண்கள். கன்னியாகுமரி மாவட்டத்தில், குளச்சலுக்கு அருகே கடம்பறவிளை என்ற ஊரைச் சார்ந்த, வசந்த குமாரி என்ற பெண்மணி, பேருந்துகள் ஓட்டுவதற்கான லைசென்ஸ் பெற்றிருக்கிறார்.

அவரைச் சந்தித்து, ''சாதாரணமாக, பெண்கள் விரும்பாத இந்தத் துறையை நீங்கள் தேர்ந்தெடுக்கக் காரணமென்ன?'' என்று கேட்டோம்.

''பெண்களால் முடியாதது எதுவுமேயில்லை. ஆனால், இவ்வளவு காலமாக, ஒரு பெண் பேருந்து டிரைவர் உருவாகவில்லை என்றால் அதற்குக் காரணம், இந்தச் சமூகம்தான்! எப்படியென்றால், பெண்கள் இந்தந்தத் துறைகளில்தான் ஈடுபடலாம்; அவற்றை மீறிச் செல்லக் கூடாது என்று ஆண்கள் வரையறுத்து வைத்திருக்கிறார்கள். அதை மீறிப் பெண்களால் வர முடியவில்லை! அதை மீறி வரும் பெண்களுக்கு யாரும் ஆதரவு கொடுப்பதில்லை. மாறாக, ஏச்சும் பேச்சும்தான் கிடைக்கும். இதனால்தான் இதுவரை பெண்கள் பேருந்து ஓட்ட முன்வரவில்லை! அதை முறியடித்துக் காட்டவே நான் இந்தத் துறைக்கு வந்தேன்.''

''நீங்கள் பேருந்து ஓட்டக் கற்றுக் கொண்ட போது, உங்களுடைய குடும்பத்தினர் முழு ஒத்துழைப்புத் தந்தார்களா?''

''நான் திருமணமானவள். எனக்கு இரண்டு பிள்ளைகள் உள்ளனர். எனது கணவர் ஒரு கட்டடத் தொழிலாளி. எங்களுடைய குடும்பம், ஒரு நடுத்தரக் குடும்பம்தான். நான், பேருந்து ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று எனது கணவரிடம் அனுமதி கேட்ட போது, அவர் எந்தவிதமான மறுப்பும் சொல்லாமல் சம்மதித்தார்.''

''தமிழகத்தின் முதல் பெண் பேருந்து ஓட்டுநர் என்ற பெருமையைப் பெறும் உங்களுக்கு நேசமணி போக்குவரத்துக் கழகத்தில் வேலை கிடைத்ததா...?''

''இல்லை! ஓர் ஆண் ஓட்டுநருக்குரிய எல்லாத் தகுதிகளும் எனக்கு இருந்தும் இதுவரை வேலை கிடைக்கவில்லை. வேலை வாய்ப்பு அலுவலகம் வழியாக, நேசமணி போக்குவரத்துக் கழகத்தில் பெண் ஓட்டுநர் பணிக்கு விண்ணப்பித்து, இண்டர்வியூவுக்கும் சென்றிருந்தேன். உயரம், எடை, மற்றும் ஏனைய சான்றிதழ்கள், லைசென்ஸ் ஆகியவற்றைப் பார்த்தார்கள். சில நாட்கள் கடந்து, ஒரு நாளிதழில் பெண் ஓட்டுநருக்கான தகுதிகள் எனக்கில்லாத காரணத்தால், வேலை வாய்ப்பை நான் இழப்பதாக ஒரு செய்தியைப் படித்து விட்டு நான் அதிர்ச்சியடைந்தேன்! வேலை கொடுக்க வேலை வாய்ப்பகத்தில் பதிவு செய்து ஒன்றரை ஆண்டுகள் ஆக வேண்டும் என்றும் ஒரு விதி இருக்கிறது. என்னை நிராகரித்ததற்கு அதுதான் காரணமோ என்னவோ, தெரியவில்லை. எனக்கு வருகிற ஜூன் மாதத்தில் அதுவும் பூர்த்தியாகி விடும். அதற்குப் பிறகு மீண்டும் விண்ணப்பிக்கலாம் என்றிருக்கிறேன்!''

''உங்கள் எதிர்கால லட்சியம் என்ன..?''

''என்னைப் போன்று, ஏராளமான பெண்கள் இத் துறைக்கு வர வேண்டும். எனவே, பெண்களுக்கு என்று தனியாக, பேருந்து ஓட்டுநர் பயிற்சிப் பள்ளி ஒன்றினை ஆரம்பிக்க ஆசைப்படுகிறேன்!''




பேட்டி, புகைப்படம்:
குளச்சல் இப்ராஹீம்.

வாசகர் யோசனை:
என். ஆர். பாஸ்கரன், சிதம்பரம்

# தேர்தல் அறிக்கைகள் என்னதான் சொல்லுகின்றன?

**நூறு வயதைத் தாண்டிய காங்கிரஸ் கட்சி முதல், நேற்று முளைத்த சோஷலிஸ ஜனதா தளம் வரை, தேர்தல் அறிக்கையை விழாக் கொண்டாடி வெளியிட்டிருக்கின்றன. இந்த அறிக்கைகள் குறித்துச் சில கேள்விகளை, முன்னாள் திட்டக் கமிஷன் செயலரும், 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' சென்னைப் பதிப்பின் ஆசிரியருமான கே. வி. ராமநாதன் அவர்களைச் சந்தித்துக் கேட்டோம்:**

''எந்தக் கட்சியின் அறிக்கை வாக்காளர்களுக்கு நம்பிக்கை அளிக்கும்படி இருக்கிறது?''

''அனுபவம் உள்ள வாக்காளர்கள் தேர்தல் அறிக்கையை அப்படியே நம்பி விட மாட்டார்கள்; நம்பவும் கூடாது. இவ்வளவு வருடங்களாக நடந்த தேர்தல்களில் நாம் கேட்காத வாக்குறுதிகளா! வாக்குறுதிகளை, ஆட்சியில் இருந்த போது, எந்த அளவுக்கு நிறைவேற்றியிருக்கிறார்கள் என்று பார்த்தால் அவநம்பிக்கையே உண்டாகும். அதற்காக, ஆட்சியில் இல் லாத கட்சிகளின் வாக்குறுதிகளை அப்ப டியே நம்பி விடவும் முடியாது. தேர்தல் அறிக்கையில் அவர்கள் செய்யப் போவ தாகச் சொல்லும் காரியங்களுக்கு, நிதி வசதியை எப்படிச் சம்பாதித்துக் கொள்ளு வார்கள் என்பது பற்றி ஒருவரும் சொல்லுவதில்லை. உதாரணமாக தி.மு.க. அறிக்கையை எடுத்துக் கொண்டால், மக்க ளுக்கு இலவசமாகப் பல வசதிகளைக் கொடுப்பதாகவும், அவர்களிடமிருந்து அர சுக்கு வர வேண்டிய கடன் வகைய றாக்களை ரத்து செய்வதாகவும் முழக்கத் துடன் சொல்லியிருக்கிறது. அ. இ. அ. தி. மு. க. வோ பூரண மதுவிலக்கைக் கொண்டு வரப் போவதாகச் சொல்லுகிறது. இதனால் ஏற்படும் நிதிக் குறைவை எப்படிச் சரிக்கட்டப் போகிறார்கள் என்று ஒரு வார்த் தை கூட இல்லை.

''இ. காங்கிரஸின் அறிக்கை அரசுத் துறையின் செயல்பாடுகளைக் குறைத்துக் கொள்வது, தனியார் துறைக்கு முக்கியத்து வம் அளிப்பது, அரசுச் செலவினங்களைக் கட்டுப்படுத்துவது - போன்ற வழிமுறைகளைக் கூறுகிறது. இந் நாள் வரை பதவியில் இருந்த போது ஏன் அவர்கள் இவற்றைச் செய்யவில்லை? பிரஸார் பாரதி பற்றி இப்போது அவர்கள் சொல்லுவதும் அது போலத்தான். எனவேதான் எந்தக் கட்சியின் அறிக்கையும் உடனடியாக நம்பும் படி இல்லை.''

''கடைசியாக வெளிவந்த பி. ஜே. பி. அறிக்கை எப்படி?''

''மற்ற அகில இந்தியக் கட்சிகளுக்கு இல்லாத ஓர் அனுகூலம் பா. ஜ. க. வுக்கு இருக்கிறது. பதவியில் இருந்த போது செய்யவில்லையே என்று அதனைக் குறை கூற முடியாது. ஆனால், அவர்கள் அறிக்கையில் விவாதத்துக்குரிய அம்சங்கள் நிறைய உள்ளன. ஹிந்துத்துவம், ராமர் கோயில் கட்டுவது, எல்லாருக்கும் பொதுவான சட்டம், அரசியல் சட்டத்தின் 370வது பிரிவை எடுத்து விடுவது, சிறுபான்மையினரின் கல்வி நிறுவனங்களுக்கு உள்ள சலுகைகளை எல்லாருக்கும் கொடுப்பது, சிறுபான்மையினர் கமிஷனுக்குப் பதிலாக மனித உரிமை கமிஷன் அமைப்பது, இவை எல்லாம் சர்ச்சைக்கு உரியன. மகந்துகளும், சாத்விகளும் அவர்



● கே. வி. ராமநாதன்

கள் கட்சிப் பிரசாரத்தில் ஈடுபட்டுக் காரசார மான வார்த்தைகளை அள்ளி வீசும் போது, நமக்கு நம்பிக்கைக் குறைவு ஏற்படத்தான் செய்யும். சதி பற்றிப் பெரு மையாகப் பேசும் தலைவர்களும் கொள் ளையராக இருந்து விட்டுத் தேர்த லில் குதிப்ப வர்களும் துணை போகின்ற ஒரு கட்சி, இதையெல்லாம் சொல்லுகிறதே என்ற தயக்கம் நிச்சயம் எழும். ஜனாதிபதி ஆட்சி முறை, சிறிய மாநிலங்கள், எல்லாம் யோசிக்க வைக்கும் விஷயங்கள். தேர்தல் செலவை அரசே ஏற்பது நல்ல யோசனை. நாம் அணு ஆயுதங்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்பது தீவிரமான வாதப் பிரதிவாதங்களுக்கு உரியது. மற்ற கட்சிகள் - இடது சாரிகள் தவிர-தனியார் துறைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று சொல்லுவதை, பா. ஜ. க. சற்று அழுத்தமாகவே சொல்லுகிறது. எம். ஆர். டி. பி. சட்டத்தின் கீழ், உச்ச வரம்பை ஆயிரம் கோடி ரூபாயாக்குவது; 48,000 ரூபாய் வரை வருமான வரி விலக்கு அளிப்பது; அதிகபட்ச வருமான வரி 40 சதவீதம் மட்டுமே என்று சொல்லுவது - இவற்றை எல்லாம் ஒப்புக் கொண்டால் நாட்டின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு எங்கிருந்து பணம் வரும்? இந்த நிலையில் சுங்க, கலால் வரிகளை உயர்த்த மாட்டோம் என்று வேறு சொல்லுகிறார்கள்!''

''மண்டல் கமிஷன், ராமஜன்ம பூமி, ஸ்திரத் தன்மை - இந்த மூன்று அடிப் படைகளில் மட்டுமே இந்தத் தேர்தல் நடக்கிறது என்கிற பொதுவான நிலவரம் இருக்கிற போது, தேர்தல் அறிக்கைகளின் மற்றப் பகுதிகளில் மக்கள் தீவிர கவனம் செலுத்துவார்களா?''

''குறிப்பிட்ட இந்த மூன்று பிரச்னை களைத் தவிர, விலைவாசி உயர் வும் மக்களை வெகுவாகப் பாதிக்கக்கூடிய விஷ யம். ராமஜன்மபூமியைப் பொறுத்த வரை யில், வடநாட்டில் உள்ள அளவு தென் னாட்டில் கடுமையான கருத்துக்கள் இல்லை. இதில் நாம் மகிழ்ச்சியும் அடைய வேண்டும். இதனால், இங்கு உள்ளவர்கள் ராமபக்தர்கள் அல்ல என்று அர்த்தமல்ல. இந்தப் பிரச்னையை இவ்வளவு பெரி தாக்கி, வன்முறை அளவுக்குக் கொண்டு போயிருக்க வேண்டாம்; யார் மனத்தையும் புண்படுத்தாத சமாதான முடிவு வேண்டும் என்பதே இங்கு பலருடைய எண்ணம். வடக்கிலும் இதைப் பற்றி ஆவேசமான பேச்சுக்கள் இருந்தாலும், வோட்டுப் போடும் போது மக்களிடையே அதே அளவு ஆவேசம் இருக்குமா என்பது சந்தே கம்தான். மண்டல் விஷயத்துக்கும் இது பொருந்தும். தென்னாட்டில், ஒதுக்கீடுகள் பழகிப் போன ஒரு விஷயம். எனவே மண்டல் பிரச்னையால் எந்த ஒரு கட்சிக் கும் லாபமோ, நஷ்டமோ பெருமளவு ஏற்படும் என்று தோன்றவில்லை. வடக்கி லும், முதலில் இந்தப் பிரச்னையில் இருந்த ஆரம்பக் கோபதாபங்கள் ஓரளவுக்குத்

தணிந்தே காணப்படுகின்றன. எனினும், பீகார், உத்தரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில், இது தேர்தலில் ஒரு முக்கியப் பிரச்னையாக வைக்கப்படலாம். ஆனால், அங்கு பின்தங்கிய வகுப்பினர்களி லேயும் கருத்து வேற்றுமைகள் இருக் கின்றன.

''ஸ்திரத் தன்மை என்பது, இந்த இரண்டு பிரச்னைகளையும் விட அதிகப்படியாக வாக்காளர் மனத்தைப் பாதிக்கலாம். காங்கிரசின் மீது வெறுப்புக் கொண்டு, அவர்களைப் பதவியில் இருந்து இறக்கிய வாக்காளர்கள், அதற்குப் பதிலாக வந்த வர்கள் நடந்து கொண்டதைப் பார்த்து வெறுப்புற்றிருக்கிறார்கள். அதனால், ஸ்திர மாக, உட்கட்சிச் சண்டை போட்டுக் கொள் ளாத அரசு வேண்டும் என்று பலர் விரும்பினால் அதில் ஆச்சரியமில்லை. இதைப் போலவே, விலைவாசி உயர்வும் வாக்காளர் மனத்தைப் பாதிக்கலாம். ஆனால் எந்தக் கட்சியாலாவது விலைவாசி களை உண்மையாகவே குறைத்து விட முடியும் என்று மக்கள் நம்புவார்களா? சந்தேகம்தான்!''

''காங்கிரஸ் அறிக்கையில் ஊழல் ஒழிப்பு பற்றியோ, சோஷலிசம் பற்றியோ ஒரு வார்த்தை கூட இல்லையே?''

''சோஷலிஸம் பற்றிச் சொல்லாதது, அவர்கள் யதார்த்தவாதிகளாக மாறி விட்டதைக் காட்டினால் மகிழ்ச்சியடைய வேண்டியதுதான். குறிப்பாக பர்மிட் - லைசன்ஸ் போன்ற கட்டுப்பாடுகளை ஏற்படுத்தும் அமைப்புக்கள் பற்றி அவர்கள் சொல்லியிருப்பதும் இந்த நம்பிக்கைக்கு இடம் தருகிறது. 'சோஷலிசம்' என்று சொல்லியே வோட்டுக்கள் வாங்கி விட முடியும் என்ற நம்பிக்கை அவர்களிடமிருந்தே போய் விட்டதென்றால், அதுவும் வரவேற்கப்பட வேண்டியதுதான்!

''ஊழல் ஒழிப்பைப் பற்றித் தனியாகச் சொல்லவில்லை என்றால், அது அவர்களைப் பற்றிச் சென்ற முறை சொல்லப்பட்ட குற்றச்சாட்டுக்களை, மறுபடி நினைவுபடுத்த வேண்டாம் என்ற எண்ணத்தில் இருக்கலாம். அல்லது இன்றைய நிலையில், ஊழல் ஒழிப்பு பற்றிப் பேசினால் யாரும் நம்ப மாட்டார்கள் என்றும் நினைத்திருக்கலாம். ஊழல்கள் நடப்பதற்கே காரணமாக இருக்கும் சட்ட திட்டங்கள், விதிமுறைகள், கட்டுப்பாடுகள் இவைகளை மாற்றி அமைக்க முனைவது என்று எல்லாக் கட்சிகளும் ஒப்புக் கொண்டால், அதுவே ஊழலை ஒழிப்போம் என்ற அறைகூவலை விட அதிக நம்பிக்கை தரும்.''

''தேசிய முன்னணியின் அறிக்கையில், விலைவாசியைக் கட்டுப்படுத்தி சாதாரண மக்களைப் பாதுகாக்கப் போவதாகவும், அத்தியாவசியப் பண்டங்களை, மான்யம் அளித்து, பொது விநியோக முறையில் குறைந்த விலைக்கு அளிக்கப் போவதாகவும் சொல்லியிருக்கிறார்களே, இது சாத்தியமா?''

''மான்யம் கொடுத்துக் கொண்டே போனால் பட்ஜெட் பற்றாக்குறை பெருகும். அதைச் சமாளிக்கப் போய், பணவீக்கம் அதிகமாகும். விலைவாசிகள் மேலும் உயரும். எந்த ஏழை மக்களுக்காக மான்யம் கொடுப்பதாகச் சொல்லுகிறார்களோ, அந்த ஏழை மக்கள்தாம் அதிகம் பாதிக்கப்படுவார்கள். இது தெளிவாக நிரூபிக்கப்பட்ட விஷயம். உற்பத்தியைப் பெருக்குவதற்கு உள்ள வழிமுறைகளைக் கையாண்டு, அதன் மூலம் எல்லாப் பண்டங்களின் உற்பத்தி யையும் பெருக்குவதே சரியான முறை. மிக மிக ஏழைமையான நிலையில் உள்ள வர்களுக்குச் செய்யப்படும் உதவி, நேரடி யாக அவர்களுக்குப் போய்ச் சேரும் வகையில், சில திட்டங்கள் நிறைவேற்ற வேண்டியிருக்கலாம். ஆனால், பொதுவாக மான்யம் என்றோ, எல்லா விவசாயி களுக்கும் இலவச மின்சாரம் என்றோ, செயல்படுவதால் தேசம் மொத்தமும், குறிப்பாக ஏழைகள்தான் கஷ்டத்துக்கு உள்ளாகிறார்கள்.''

''அ. இ. அ. தி. மு. க. வின் ஐம்பது சதவிகித இட ஒதுக்கீடு பற்றி?''

''தமிழ் நாட்டில் ஏற்கெனவே நடை

---

''முதுகு வலி தாங்கலை டாக்டர்.''

''குடிசை குடிசையாக் குனிஞ்சு போய் வோட்டுக் கேட்டீங்களா?''

-- சீர்காழி வி. ரேவதி




நீங்கள்





முறையில் உள்ளதை, அகில இந்திய அளவிலும் கொண்டு வர வேண்டும் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். பார்க்கப் போனால் இதுதான் தி. மு. க. வின் கோரிக் கையும் கூட. ஆனால் இந்த இரு கட்சிகள் மட்டுமின்றி, இந்தப் பிரச்னை பற்றிப் பேசும் மற்றவர்களும், காலப் போக்கில் இட ஒதுக்கீட்டுக்கு அவசிய மில்லாமல், எல்லோரும் முன்னேறும் வழி களை உடனடியாகக் கடைப்பிடிக்க வேண் டும் என்பது பற்றி ஏனோ சிந்திப்ப தில்லை!''

''தி. மு. க. வின் அறிக்கை பற்றி?''

''தாங்கள் பதவி நீக்கம் செய்யப்பட்டது தவறு என்பதை வன்மையாகச் சுட்டிக் காட்டி, தாங்கள் செய்த சாதனைகளையும், செய்யப் போவதாக இருந்தவைகளையும் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இவர்கள் அறிக்கையில் ஏராளமான இலவசத் திட்டங்களும், கடன் தள்ளுபடித் திட்டங்க ளுமே பிரதான அம்சங்களாக இருக்கின் றன. இதனால் நிதிப் பற்றாக்குறை மேலும் அதிகமாகும். உற்பத்தி குறையும். மலிவு விலை மதுத் திட்டம் பெண் மக்களை வேத னைப்படுத்தியிருக்கிறது என்பதைத் தி. மு. க. உணர்ந்து கொண்டிருப்பதாகத் தெரிய வில்லை.''

''பா. ம. க. வின் அறிக்கை, மரங்கள் நடுவது பற்றிப் பேசுகிறதே?''

''பாட்டாளி மக்கள் கட்சிக்கு, இது முதல் தேர்தல் அறிக்கை. கல்வி, வேலை வாய்ப்பு விஷயங்களில் இட ஒதுக்கீடு செய்வதில் மற்ற எல்லாக் கட்சிகளையும் விட அதிகத் தீவிரம் காட்டுகிறது. முன்னேற்றத்துக்கு வழிதானா? தன்னாட்சி உரிமை, மாநி லங்கள் பிரிந்து போகும் உரிமை என்பன வெல்லாம் மிக ஆபத்தானவை. வேறு எந்தக் கட்சியும் குறிப்பிடாத, தமிழீழம் கட்டாயம் வேண்டும் என்று இவர்கள் மட்டுமே குறிப்பிட்டிருப்பது வருத்தம் தரும் விஷயம். கடைசியாக நீங்கள் கேள்வி யில் குறிப்பிட்ட அம்சம்: காடு களை வளர்ப்பதிலும், மரங்கள் நடுவதி லும் தீவிரமாக இருப்போம் என்கிறார்கள். இந்தக் கட்சி நடத்திய சாலை மறியல் போராட்டங்களின் போது வெட்டிச் சாய்க்கப்பட்ட மரங்களை நினைத்தால், பிராயச்சித்தமாக இதை அறிவித்திருக்கி றார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது!''

சந்திப்பு: சாருகேசி
படம்: யோகா
அட்டை வண்ணப்படங்கள்: சுபா
வண்ண ஓவியம்: அரஸ்

# தேர்தல் கண்ணோட்டத்தில் விளம்பரங்கள்



## கோனி ஃபேன்ஸ்

வேட்பாளர்களே, எதிர்க்கட்சியின்
பிரசாரத்தை எண்ணி எண்ணி
உங்களுக்கு ஒரே புழுக்கமாயிருக்குமே.
எங்கள் **'கோனி'**
மின் விசிறியைச் சுழல
விட்டுப் போக்கிக்
கொள்ளுங்கள் புழுக்கத்தை.
புறப்படுங்கள் வெற்றி
வாகை சூட!



தயாரிப்பு: ஜெயநிகில்
படம்: ராமு





## பூஷணி



### எவர்சில்வர் மெட்டல் பாத்திரங்கள்! எல்லாக் காலத்துக்கும் ஏற்றவை!

தேர்தலில் நின்று நீங்கள்
தோற்றுப்போகலாம். ஆகவே
**'பூஷணி'** எவர்சில்வரில்
ஆன திருவோடு ஒன்றை
முன்கூட்டியே வாங்கி
வைத்து விட்டுத் தேர்தலில்
நில்லுங்கள்.
உத்தரவாதமான
எவர் சில்வர் பாத்திரங்களுக்கு
'பூஷணி'



## குணலட்சுமி சூப்பர் பம்பர்



தொகுதிக்குப் போன பிளாஸ்டிக்
குடங்கள் எல்லாம் திரும்பி
வருவது ஏன்?
குத்து விளக்குகளும் திரும்பி
வந்துவிட்டதே ஏன்?
வேட்டி சட்டை கூட வேண்டாமா?
'குணலட்சுமி சூப்பர் பம்பர்'
பரிசுச் சீட்டுதான் அவர்களுக்கு
வேண்டுமாம்!
'குணலட்சுமி சூப்பர் பம்பர்'
சீட்டு 2 ரூபாய்!
வாங்கிடுவீர்! கொடுத்திடுவீர்!

## வாக்குப் பதிவின் போது தடுமாறினார் அதிகாரி!




தேர்தல் அதிகாரி:
ஆகா! உங்கள்
தூய்மையான சருமத்
தில் கருப்புப் புள்ளி
வைக்கக் கூசுகிறதே.
உங்கள் சருமத்தின்
ரகசியம் என்ன?

ஓட்டுப் போட வந்தவள்:
நான் என்
சருமத்துக்கு நறுமண
மிக்க **'சரோரா நைஸ்'**
சோப்பை மட்டுமே
உபயோகப் படுத்து
கிறேன்.

தமிழ்நாட்டில் உண்மையான போட்டி இரு கழகங்களுக்கிடையேதான் என்பது போல், மேற்கு வங்கத்தில் பல கட்சிகள் இருந்தாலும், உண்மையான போட்டி இடதுசாரி முன்னணிக்கும் இ. காங்கிரசுக்குமிடையேதான். எல்லா மாநிலங்களிலும் இ. காங்கிரஸ் கட்சியில் கடுமையான உட்பூசல்கள் உண்டு என்றாலும் மேற்கு வங்கத்தில் இ. காங்கிரஸ் உட்பூசல் படு மோசம்! உட்கட்சிப் பூசலால் அடிதடிகள் தலைவருக்கும் கொடுத்துப் பார்த்துப் பார்த்து, ஓய்ந்து போய் விட்டார். ஆதரவாளர்களே இல்லாத பிரணவ் முகர்ஜிக்குக் கூட ஒரு வாய்ப்புத் தந்தார். அப்படியும் நிலைமையில் முன்னேற்றமில்லை. இப்போது சித்தார்த்த சங்கர்ராய்க்கு அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது.

சித்தார்த்த ராய் புகழ்பெற்ற சட்ட நிபுணர்; பல ஆண்டுகள் முதலமைச்சராயிருந்தவர்; தேசபந்து சித்தரஞ்சன் தாஸ்

## மேற்கு வங்காளம் :

# ஜோதிபாசுவின்



ஜோதிபாசு.

என்பது அன்றாட நிகழ்ச்சிகளாகும். யாராவது ஒரு தலைவர் 'மேலிடத்து' ஆதரவுடன் பலம் பெற்று விட்டால், மற்ற தலைவர்கள் தங்கள் வேற்றுமைகளை மறந்து ஒன்றுபட்டு, அந்தத் தலைவரை வீழ்த்தி விடுவார்கள்!

பாவம், ராஜீவ் காந்தி! மாநிலக் காங்கிரசின் தலைமைப் பதவியை ஒவ்வொரு

குடும்பத்தைச் சேர்ந்தவர். ஆகவே அவருக்கு மற்ற தலைவர்களை விட அதிகச் செல்வாக்கு உண்டு என்பதெல்லாம் சாதகமான அம்சங்கள் என்றால், பாதகமான பல அம்சங்களும் உண்டு. எமர்ஜென்ஸியை அமுலுக்குக் கொண்டு வரும்படி இந்திரா காந்திக்கு ஆலோசனை கூறியவர் அவர்தான். எமர்ஜென்ஸி சமயத்தில் மே. வங்க முதலமைச்சராக அவர் இருந்த போது, மக்களின் ஜனநாயக உரிமைகள் பறிக்கப்பட்டதையும் அதிகாரவர்க்கத்தின் அடக்குமுறை தாண்டவமாடியதையும் அரசியலுணர்வு கொண்ட மே. வங்க மக்கள் இன்னும் மறக்கவில்லை!

இடதுசாரி அணியின் முக்கிய பலம் ஜோதிபாசு. அவர் மக்களால் மதிக்கப்படுகிறார்; நேர்மையானவர், கண்ணியமானவர் என்று கருதப்படுகிறார். ஆனால் அவரது புகழுக்கு ஊறுநேரும் வகையில் இரண்டாண்டுகளுக்கு முன் ஒரு நிகழ்ச்சி நடந்து விட்டது. இடதுசாரி முன்னணியைச் சேர்ந்த ஆர். எஸ். பி. கட்சியின் தலைவர்களில் ஒருவரும் மந்திரியுமான ஜதீன் சக்ரவர்த்தி ஒரு வெடிகுண்டைப் போட்டார். சில ஆண்டுகளுக்கு முன், ஜோதிபாசுவின் புதல்வர் சந்தன் பாசு 'பெங்கால் லாம்ப்' தொழில் நிறுவனத்துடன் தொடர்பு கொண்டிருந்தார். ஜோதிபாசுவின் வேண்டுகோளின்படி, தாம் அந்த நிறுவனத்துக்குச் சில விசேஷ சலுகைகள் அளித்ததாக ஜதீன் சக்ரவர்த்தி கூறினார். இந்த அறிவிப்பு,

பெரும் பரபரப்பை உண்டாக்கியது. ஜோதி பாசு இக் குற்றச்சாட்டை மறுத்தார். இதன் விளைவாக ஜதீன் சக்ரவர்த்தி தம் மந்திரி பதவியை இழக்க நேர்ந்தது. இறுதியில் அவர் கட்சியிலிருந்தும் விலக்கப்பட்டார். இந்தத் தேர்தலில் அவர் டாகுரியாத் தொகுதியில் இடதுசாரி முன்னணிக்கு எதிராகச் சட்டசபைக்குப் போட்டியிடுகிறார்!

இதுவொரு பலவீனமென்றால், இடதுசாரி முன்னணியின் பலம், ஜாதி, மதங்களின் அடிப்படையில் பகைமையும் சச்சரவுகளும் மேற்கு வங்கத்தில் அநேகமாக இல்லை என்பதே. கல்வி, வேலை வாய்ப்புகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு அரசியல் சாசனப்படி அளிக்கப்பட்டுள்ள ஒதுக்கீட்டைத் தவிர, பிற்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கீடு எதுவும் இல்லை. மண்டல் கமிஷன் காரணமாக, மற்ற மாநிலங்களிலும் டில்லியிலும் நிகழ்ந்த கலவரங்கள், மேற்கு வங்கத்தைப் பாதிக்கவேயில்லை.

# பலமும் பலவீனமும்!

இடதுசாரி முன்னணியின் இன்னொரு பலம் உள்ளாட்சித் துறையில் அது செய்த சாதனைகளாகும். கடந்த பதின்மூன்று ஆண்டுகளில் அது மூன்று முறை உள்ளாட்சித் தேர்தல்களை நடத்தியிருக்கிறது. காங்கிரஸ் ஆளும் பல மாநிலங்களில் உள்ளாட்சித் தேர்தல்கள் ஒழுங்காக நடைபெறுவதில்லை என்பதை நினைவில் கொண்டால், மேற்கு வங்க அரசின் இந்தச் சாதனையின் முக்கியத்துவம் புரியும்.

இடதுசாரி ஆட்சியில் கிராமங்களில் நிலச்சீர்திருத்தம், கல்வி, சிறு தொழில்கள், கூட்டுறவுத் துறை இவற்றில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. கேரளத்தைப் பின்பற்றி, மேற்கு வங்கத்திலும் எல்லோருக்கும் எழுத்தறிவு அளிக்கும் இயக்கம் ஓரளவு பலன் தரத் துவங்கியுள்ளது. இதன் விளைவாகக் கிராம மக்களிடையே இடதுசாரி முன்னணிக்குப் பரவலான ஆதரவு உள்ளது.

இதற்கு மாறாக நகரப் பகுதிகளில் அதிக முன்னேற்றம் இல்லை. மின்வெட்டு, பல ஆண்டுகளாகத் தொடர்ந்து இருக்கிறது. மக்கள் இ த னா ல் மிகவும் அல்லற்படுகிறார்கள். குறிப்பாகக் கல்கத்தாவின் பல பிரச்னைகள் - இட நெருக்கடி, போக்குவரத்துச் சிக்கல் முதலியன தீருவதற்கான அறிகுறிகளையே காணோம். இதன் விளைவாக நகரவாசிகளிடையே இடதுசாரி எதிர்ப்புணர்வு ஓரளவு பரவலாக இருக்கிறது. ஆகவேதான் கடந்த 87 லும் 89 லும் நடைபெற்ற தேர்தல்களில் இ. காங்கிரஸ் சீர்குலைந்த நிலையிலும் நகர்ப்புறத் தொகுதிகளில் பலவற்றில் வெற்றி பெற்றுவிட்டது.

இடதுசாரி அரசின் கல்விக் கொள்கையால், மேல் மட்டத்து மக்களும் நடுத்தர வ ர் க மு ம் அதிருப்தியடைந்துள்ளனர். துவக்கப் பள்ளிகளில் ஆங்கிலம் கற்றுத் தரப்படுவதில்லை. நடுத்தரப் பள்ளிகளில் தான் ஆங்கிலக் கல்வி தொடங்குகிறது. ஆங்கிலந்தான் வாழ்க்கையில் முன்னேற்றத்துக்குச் சாவி என்று கருதும் நடுத்தர வர்க்கத்தினருக்கு, அரசாங்கத்தின் இந்தக் கொள்கை பிடிக்கவில்லை.

ஆசிரியர்களும், இடதுசாரி அரசாங்கத்திடம் அதிருப்தி கொண்டுள்ளனர். முன்பு ஆசிரியர்களின் ஊதியம் குறைவாயிருந்ததால் அந்த இழப்புக்கு ஈடாக அவர்கள் 65 வயது வரை பணியாற்ற அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். இப்போது அவர்களுடைய ஊதியம், மற்ற அரசாங்க ஊழியர்களின் ஊதியத்துக்கு இணையாக உயர்த்தப்பட்டுள்ளதால், அவர்களது ஓய்வு பெறும் வயதை அறுபதாகக் குறைத்து, அரசு உத்தரவிட்டது. இதை எதிர்த்து ஆசிரியர்கள் வழக்குத் தொடுத்துள்ளனர். பல ஆண்டுகளாக இந்த வழக்கு, தொடர்ந்து வருகிறது.

இ. காங்கிரஸ் இந்த வாய்ப்பைத் தவற விடுமா? தான் ஆட்சிக்கு வந்தால் இந்த அறுபது வயது உத்தரவை ரத்து செய்து விடுவதாக அது தேர்தல் வாக்குறுதி அளித்திருக்கிறது! மற்றபடி அரசாங்க நிர்வாக இயந்திரத்தின் மெத்தனம், லஞ்சம் முதலிய ஒழுங்கீனங்கள், தொழில் துறையில் தேக்கம், மின்வெட்டு, விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் இவையெல்லாம் இ. காங்கிரஸ் கட்சியின் தேர்தல்



அடுத்த இதழில்:

முக்கியத் தொகுதிகள் மூன்று....

-- நேரடி ரிப்போர்ட்

அஸ்திரங்கள். இவை இ. காங்கிரஸ் ஆளும் மாநிலங்களிலும் உள்ளன என்று சுட்டிக் காட்டும் இடதுசாரி அணி, தொழில் தேக்கம், மின்வெட்டு, விலைவாசி உயர்வு, வேலை வாய்ப்புக் குறைவு இவற்றுக் கெல்லாம் மத்திய அரசின் தவறான கொள்கைகளும், அது மேற்கு வங்கத்துக்கு இழைக்கும் அநீதியுமேதான் காரணங்கள் என்கிறது.

இப்போது மே. வங்கத்தில் நடைபெற விருக்கும் தேர்தல், இதற்கு முன் நடைபெற்ற தேர்தல்களிலிருந்து ஒரு விஷயத்தில் வேறுபட்டது. இந்தத் தேர்தலில் இரு புதிய கட்சிகள் மும்முரமாகச் செயல்படுகின்றன. ஒன்று, பி. ஜே. பி. இன்னொன்று, தாங்கள் தாம் உண்மையான மார்க்சியவாதிகள் என்று சொல்லிக் கொள்ளும் சில உதிரி இடதுசாரிக் கட்சிகள் அமைத்துக் கொண்டுள்ள அணி. இவை இரண்டும் இந்தத் தேர்தலில் அதிக இடங்களைப் பிடிக்க முடியாதுதான். இருந்தாலும் அவை வோட்டுக்களைச் சிதறச் செய்யும். இதன் விளைவு என்ன ஆகும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. என்றாலும் இந்தத் தேர்தலில் இடதுசாரி முன்னணி வெற்றி பெறும் வாய்ப்பே அதிகம். ஆனால் அதன் பெரும்பான்மை பலம் குறைந்து விடும் என்றே தோன்றுகிறது.

- சு. கிருஷ்ணமூர்த்தி.

---

# ஆயிரம் விளக்கு:


ஸ்டாலின்


கே. ஏ. கே.

# ஸ்டாலினா? கே.ஏ.கே. யா?

தொகுதி முழுக்க இரு தரப்பினருமே தேர்தல் பணியை வெகு சுறுசுறுப்பாகச் செய்து கொண்டிருக்கிறார்கள். சுவரில் இடம் பிடிப்பது, பேனர், கட் அவுட் என்று ஒவ்வொரு விஷயத்திலும் போட்டா போட்டி. அடுத்தடுத்தோ, எதிரும் புதிருமாகவோ இரு கட்சி விளம்பரங்களையும் தொகுதி முழுவதும் காண முடிகிறது. அண்ணா மேம்பாலத்தின் ஒருபுறம் முழுக்க இரட்டை இலையும், எதிர்ப்புறம் முழுக்க உதயசூரியனும். வள்ளுவர் கோட்டத்துப் பூங்கா சுற்றுச் சுவரில் முழுக்க முழுக்க இ. இலை, உ. சூரியன் டிசைன்கள்!

ஸ்டாலினும் சரி, கே. ஏ. கே. வும் சரி, இருவருமே தொகுதிக்கு நன்கு பரிச்சயமானவர்கள். இதுதான் போட்டியின் கடுமையை அதிகப்படுத்துகிறது. தி. மு. க. தரப்பில் கலைஞர், ஸ்டாலின் பற்றிய டேப்களை ஆட்டோக்களிலும், தேர்தல் பணிமனைகளிலும் ஒலிபரப்பினால், அ. தி. மு. க. தரப்பில், ''கே. ஏ. கே. ன்னா, கே. ஏ. கே.தான்! பேஷ்... பேஷ்! ரொம்ப நல்ல மனுஷர்!'' என்று உசிலைமணி ஸ்டைல் விளம்பரம் ஒலிபரப்பப்படுகிறது.

ஸ்டாலினுக்குத் தி. மு. க. இளைஞரணியினர் முழுமூச்சாகத் தேர்தல் வேலை செய்கிறார்கள். வீட்டு வசதி வாரிய அடுக்குமாடி வீடுகளில் கூட மாடியேறி வீடு வீடாகச் சென்று, வோட்டுக் கேட்கிறார் ஸ்டாலின். ஒவ்வொரு பகுதியிலும், தொகுதியின் எம். எல். ஏ. என்கிற முறையில், ஸ்டாலின் செய்துள்ள பணிகளைப் பட்டியலிட்டு வாக்காளர் பார்வைக்கு வைத்திருக்கிறார்கள். ஸ்டாலின் தாம் செல்லும் பகுதிகளில், தமது சாதனைகளை எடுத்துச் சொல்லி வாக்குக் கேட்கிறார். அதனால் வெற்றி நிச்சயம் என்கிறார்கள்.

அ. தி. மு. க. வினர் போடுகிற கணக்கு வேறாக இருக்கிறது. சென்ற சட்டசபைத் தேர்தலில், தி. மு. க. வினர் கை ஓங்கியிருந்தது உண்மைதான். ஆனால், சென்ற நாடாளுமன்றத் தேர்தலில் இ. காங்கிரஸ் வேட்பாளரான அன்பரசுக்கு, ஆயிரம் விளக்குத் தொகுதியில் மட்டும், தி. மு. க. வேட்பாளர் டாக்டர் கலாநிதியை விடச் சுமார் பதினைந்தாயிரம் வாக்குகள் அதிகம் கிடைத்திருக்கிறது. இத்தனைக்கும் அன்பரசு தொகுதியின் பல பகுதிகளுக்கு நேரில் சென்று வாக்காளர்களைச் சந்திக்கவேயில்லை. டாக்டர் கலாநிதிக்குத் தொகுதியில் மிக நல்ல பெயர். அப்படியிருந்தும் வெற்றி பெற்றது அன்பரசுதான்!

இந்த நிலையில், ஏற்கெனவே இரண்டு முறை ஆயிரம் விளக்குத் தொகுதி எம். எல். ஏ. வாகப் பணியாற்றிய கே. ஏ. கே. வுக்கு வெற்றி நிச்சயந்தான் என்பது அவர்களின் கணக்கு.

ஸ்டாலின் இப்போதே தொகுதி முழுவதும் ஒரு சுற்று முடித்து விட்டார். தேர்தலுக்குள் இன்னொரு முறை வாக்காளர்களைச் சந்தித்து விடுவார். இதுமட்டுமல்லாமல் வழக்கமாகப் பனகல் பார்க்கில் நடைபெறும் வி. பி. சிங்கின் பொதுக் கூட்டம் கூட ஸ்டாலின் தொகுதிக்குள் வருகிற மாதிரி இந்த முறை போக் ரோடில் நடத்தியிருக்கிறார்கள். ஸ்டாலினுடைய இந்த உற்சாகத்துடன் ஒப்பிட்டால் அ. தி. மு. க. வினரின் சுறுசுறுப்பு கொஞ்சம் குறைவுதான். பொதுக் கூட்டங்கள் ஏற்பாடு செய்வதிலும் தி. மு. க. வினர் அதிகச் சுறுசுறுப்புக் காட்டுகின்றனர்.

தேர்தல் நெருங்க, நெருங்க, இரு தரப்புப் பிரசாரமும் இன்னும் சூடு பிடிக்கும் என்பதில் ஐயமில்லை. இருவருமே தொகுதி மக்களுக்கு நன்கு அறிமுகமானவர்கள் என்பதால் வெற்றி யாருக்கு என்பது சுலபத்தில் கணித்து விடக் கூடிய விஷயமாய்த் தெரியவில்லை!

-- நமது நிருபர்.

# தலை தலையாம், தலைவர்களாம்!

## பரிசு: ரூ.250

'தேர்தல் சிறப்பிதழில் வாசகர்களுக்குப் போட்டி வைக்க வேண்டும்; இருபது அரசியல் தலைவர்களின் தலைகளைக் கார்ட்டூன் சித்திரங்களாக வரைந்து கொடுங்கள்' என்று ஓவியர் அரஸிடம் கேட்டோம். மனுஷன் குறும்பாக, அரசியல் தலைவர்களுடன் அரசியலுக்குத் தொடர்பில்லாத சிலரையும் சேர்த்து வரைந்து விட்டார்! இருபது பெயர்களையும் தபால் கார்டில் சரியாகப் பட்டியலிட்டால் பரிசு ரூ. 250/-. முடிவு தேதி: 29.5.91. சரியான விடைகளை ஏராளமான பேர் எழுதி விட்டால், பத்துப் பேருக்குக் குலுக்கல் முறையில் தலா ரூ. 25/-.




ஆளை விட்டா
நம்மையே கூட
சேர்த்துடுவார்
போலிருக்கே!


வன்முறை
தாண்டவ-
மாடுது...
ஆட்சி கலைப்பு
இல்லை!
சட்ட ஒழுங்கு
மோசம்...
நிச்சயமா டிஸ்மிஸ்
இல்லே...
அதான் சரி!
தமிழ்நாடு
நாடகத்தையே
இங்கேயும்
போட்டுப்
பாத்துற
வேண்டியது
நான்!


ம்ச்!
வன்முறையே
கூடாது...
தேர்தல்
அதாவது
சின்னமாய!
அதானே
பார்த்தேன்!



கல்கி

1991 மே 19
மலர் : 49 இதழ் : 42
பிரஜோத்பத்தி வைகாசி 5



# ஐயோ பாவம், எம். ஜி. ஆர்.!

இறந்து போன ஒருவரிடம் விரோதி கூட பகைமை பாராட்ட வேண்டியதில்லை; குறைகூறிக் கொண்டிருக்க அவசியமில்லை. அதுவும் எம். ஜி. ஆர். போன்று, மக்களின் மனத்தில் நீங்கா இடம்பெற்றுவிட்ட ஒருவரிடம், நாம் கண்டிருக்கக்கூடிய கறைகளை மறந்து விடுவதே நல்லது. அவரிடமிருந்த நற்குணங்களை மட்டுமே எடுத்துக் கூறி, மக்களை நல்வழிப்படுத்துவதே சிறந்தது. ஆனால், எம்.ஜி.ஆர். சிலையைத் திறந்து வைத்துக் கருணாநிதி இன்று பேசுவது, இந்த உயர்நோக்கில் அல்ல. சில காலம் முன்பு இதைச் செய்திருந்தால் பாராட்டியிருக்கலாம்; இப்போது அல்ல. இன்று வோட்டுப் பிடிக்கவே இந்தக் காரியம் செய்கிறார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

எந்தத் திருநாவுக்கரசு அமைச்சராக இருந்த போது, வீட்டு வசதி விஷயத்தில் தில்லு முல்லு பண்ணி, மக்கள் பணத்தை விழுங்கினார் என்று, முதல்வர் கருணாநிதி சட்டசபையிலேயே குற்றம்சாட்டினாரோ, அதே திருநாவுக்கரசு கட்சியுடன் தோழமை கொண்டாடுகிறார். அவர் அருகிலிருக்க, அவர் உபயத்தில் எம். ஜி. ஆர். சிலையைத் திறந்து வைக்கிறார். இதை வடிகட்டின தேர்தல் ஸ்டண்ட் என்றுதான் வர்ணிக்க முடியும்.

''எம். ஜி. ஆர். ஒன்றும் அ. தி. மு. க. வுக்கே உரியவரல்ல'' என்கிறார் மு. க. உண்மைதான். எம். ஜி. ஆர். எல்லோருக்கும் உரியவரே. அப்படியேதான் காமராஜர். அவ்வாறேதான் பெரியார், ராஜாஜி எல்லோருமே. ஆனால் கருணாநிதி ஒரு கூட்டத்தில், ''ராஜாஜி, காமராஜர் போன்றோரோடு அரசியல் நடத்திய நான், இன்று யாரை எதிர்க்க வேண்டியிருக்கிறது பார்த்தீர்களா?' என்று அனுதாப அலை எழுப்பப் பார்க்கிறார். கூடவே, 'ராஜாஜியை முதல்வர் ஆக்கியது போல், ஜெயலலிதாவை இப்போது சில பத்திரிகைகள் சேர்ந்து கொண்டு முதல்வர் ஆக்கப் பார்க்கின்றன' என்று சாடுகிறார். ஆக, ராஜாஜிக்கு இவர் தரும் மரியாதைதான் என்ன?

கருணாநிதி, ஜெயலலிதா, ராஜீவ் காந்தி முதலிய எல்லோருமே, எம்.ஜி.ஆர்., காமராஜர், ராஜாஜி போன்றவர்களின் பெயர்களைப் பயன்படுத்தி, வோட்டு அறுவடை செய்யப் பார்க்கிறார்கள் என்பதே உண்மை. இங்கே தோன்றப் போவது எம். ஜி. ஆர். ஆட்சியுமல்ல; காமராஜர் ஆட்சியுமல்ல; அண்ணா ஆட்சியுமல்ல. ஜெயலலிதா அல்லது கருணாநிதி ஆட்சிதான். அந்தப் பெருந்தலைவர்கள் இவர்கள் கையில் சிக்கி இழிவுபடுத்தப்படுகிறார்கள். அவர்கள் பெயர்களைப் பயன்படுத்தவே இவர்கள் அருகதையற்றவர்கள்.

இவர்கள் மேடைப் பேச்சுக்களில் சாக்கடை நாற்றம் வீசுகிறது. ''என் மேல் திராவகம் வீசச் சதி செய்கிறார் கே. கே. எஸ். எஸ். ஆர்.'' என்கிறார் ஜெ. ''கருணாநிதி என்ற தீயசக்தியிடமிருந்து, நாசகாரச் சக்தியிடமிருந்து இந்தியாவைக் காப்பாற்ற வேண்டும், தமிழகத்தை மீட்க வேண்டும்'' என்கிறார்.

''நான் டேப் செய்து வைத்திருக்கிறேன்; எம். ஜி. ஆர். பற்றி ஜெயலலிதா என்ன சொன்னார் என்று எனக்குத் தெரியும்'' என்கிறார் மு. க. ''டேப் செய்வது பெரிய விஷயமா? நான் கூடத்தான் கருணாநிதி குரலில் வேறு ஒருவரைப் பேச வைத்து டேப் செய்ய முடியும்'' என்கிறார் ஜெ.! தலைவர்களே இப்படிப் பேசினால் குட்டித் தளபதிகளின் பேச்சு இதை விடத் தரம் தாழ்ந்து போவதில் வியப்பென்ன?

தேர்தலில் வன்முறை என்பது இரண்டு வகை. ஒன்று, திட்டமிட்டுக் குண்டர்களை ஏவி, வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றுவது போன்றவை. இவற்றை அரசு அதிகாரிகளும், போலீஸும், தேர்தல் கமிஷனும் விழிப்புடன் இருந்து, ஒருவரோடு ஒருவர் ஒத்துழைத்தால் தவிர்த்து விடலாம். ஆனால், மக்களுக்கே ஆவேசம் உண்டாகிற மாதிரி, தலைவர்கள் பேசுவதால் ஏற்படும் தீமைகளைத் தடுப்பது ரொம்பக் கஷ்டம். அதனால்தான் கருணாநிதி காரைப் பின்பற்றிச் சென்ற கார்கள் மீது, கல்லெறிதல் நடைபெற்றிருக்கிறது. அத்வானி கூடக் கல்லடி வாங்கிக் கொண்டுதான் தலைநகர் திரும்பினார்.

தலைவர்கள் கொள்கைகளை விளக்கட்டும்; திட்டங்களை விவரிக்கட்டும்; மக்களுக்கு நல்லறிவு புகட்டட்டும்; ஆவேசத்தை அல்ல.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# யாருக்கு வோட்டு? கல்கி வாசகர்கள் தீர்ப்பு!



'அணியாவது மணியாவது எல்லாம் சுத்த ஏமாற்று; சுயேச்சைக்கே என் வோட்டு' என்று சிலரும்; 'நாடாளு மன்றத்துக்கு ஜனதா தளம், சட்டமன்றத் துக்கு அ. தி. மு. க. என்று சிலரும்; 'என்னை யார் கேட்பது? நான் மார்க ரெட் தாட்சருக்குக் கூட வோட்டுப் போடுவேன்' என்று ஓரிருவரும் எழுதி யிருந்தாலும்,

**கல்கி வாசகர்களின் அதிகபட்ச வோட்டுக்கள் தி. மு. க. - தேசிய முன்னணிக்கே விழுந்துள்ளன.**

சதவீதம் பின்வருமாறு:

அ. தி. மு. க. - இ. காங்கிரஸ் 32%

தி. மு. க. தேசிய முன்னணி - 46%

பி. ஜே. பி. - 18.5%

சுயேச்சை இத்யாதி - 3.5%

கல்கி வாசகர்களின் இந்தத் தீர்ப்பு பொதுத் தேர்தலிலும் பிரதிபலிக்குமா? பத்து நாளில் தெரிந்து விடப் போகி றதே!

குலுக்கல் முறையில் தலா ரூ. 25 பரிசு பெறும் பத்துப் பேர் விவரம்:

1. தனினி ராமநாதன், 16, ராமசந்திர ஐயர் தெரு, தி. நகர், சென்னை 17; 2. எஸ். என். நாதன், 1-7-25, சந்தை பஜார், சுரண்டை, 627859; 3. வி. வி. கணபதி, 36 - ஐ. புதுத் தெரு விரிவாக்கம், போத னூர், கோவை 641023; 4. டி. முத்துச் சாமி, 87, ஜி, கிழக்கு கோவிந்தபுரம், சோலை இல்லம் எதிரே, திண்டுக்கல் 624001; 5. வேங்கடராமன், 33, கணபதி காலனி, சேமியர்ஸ் சாலை, சென்னை -18; 6. ஏ. சந்திரசேகரன், ஜி. எச். எஸ்., தேவிகுளம், 685613; 7. ஏ. வெண்ணிலா ஜெயப்பிரகாஷ், 29, சத்தியநகர், ஸிப் காட், ராணிப்பேட்டை; 8. எஸ். புவனே சுவரி, 16, பிருந்தாவன் நகர், எர்ணாவூர், சென்னை - 57; 9. அ. வானதி, த/பெ. கோ. அய்யாக்கண்ணு, நாட்டுச் சாலை அஞ்சல், பட்டுக்கோட்டை வட்டம்; 10. பி. அ. முஸ் தபா கமால், 140, மசூதித் தெரு, தக்கோலம் 631.151.

படம்: சுபா




# பரிசு ரூ. 40,000

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

| | |
|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. 20,000/— |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. 10,000/— |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/— |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/— |

**முடிவு தேதி: ஆகஸ்டு 31, 1991**

- இதற்கடுத்த பத்து மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து கல்கி பொன்விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.
- நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.
- கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.
- பிரதி வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 — 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.
- கடிதப் போக்குவரத்து கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.
- அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன்விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

— ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

'தூக்கமா? மயக்கமா...?'

'இல்லை செத்துக் கொண்டிருக்கிறோமா...'

'ஐயோ.... இது என்ன... எங்கே அவர்...'

மீரா கண்களைத் திறந்து சுற்றிலும் பார்க்கிறாள்.

முன்னே பின்னே அறிமுகமில்லாத முகங்கள்; வெள்ளை உடை; டெட்டால் வாசனை; எங்கோ 'சரசர'வென விடாத ஓசை....

'படுவா... என்னா சப்தம் போடறே... பட்டணம் வரட்டும்... உங்க அப்பாருகிட்ட சொல்லி....'

குழந்தை பால் குடிக்கும் ஓசையா இது... இல்லை. எங்கோ ஸ்டிரெச்சர் வண்டியில் நோயாளிகள் நகர்த்தப்படும் ஓசை...

''என் கண்ணே...''

இத்தனைக்கும் நடுவே, அம்மாவின் கலைந்த முகமும், கண்ணீர் பொங்கும் கண்களும் - மீராவின் மூளையில் இமைப்பொழுது பதிய..

அவள் மீண்டும் கண்களை மூடிக் கொள்கிறாள். உடம்பில் எங்கெங்கோ வலி... இடுப்புக்குக் கீழ் அசைக்க முடியவில்லை.

'அ...ம்...மா...'

அவள் வாய் விட்டு முனகியதும் - புறங்கையில் 'சுருக்'கென ஊசி போடப்படுகிறது.

மறுபடியும் விழிப்பில்லாத மோன நிலை...

அம்மாவின் அழுகுரலும், அப்பாவின் கரகரத்த குரலும் காதில் விழுந்தாலும் - இவளால் வாய் திறந்து எதுவும் பேச முடியாத நிலைமை...

''பெங்களூர் ஃபார்முக்கு டிக்கட் வாங்கிட்டேன். பி லே ன் லே ல போகப் போறோம்...''

கீர்த்தி, அவள் காதோடு சொல்கிறான்.

''நீ எங்கே போனாலும் மஞ்சள் வேஷ்டியையும், பாலிகைக் கிண்ணங்களையும் எடுத்துண்டு போகணும். ஆமா...''

- நடுவே நாகு மாமா கட்டளையிடுகிறார்.

அனுராதா ரமணன்

''இத்தனை பேருக்கு வாழைக்கா கறி மட்டும் போதுமா மீரா... இல்லே கொஞ்சம் பூசணிக்காய நறுக்கிக் கூட்டு பண்ணிடலாமா?''

கீர்த்தியின் தாய், அவளுடைய தோளைத் தொட்டுக் கேட்கிறாள்.

''உன் வைரத் தோட்டைக் கழற்றிக் கொடு... புளு ஜாகரான்னு பார்க்கலாம்...''

கீர்த்தியின் கொள்ளுப் பாட்டி, இவள் காதைப் பிடித்து இழுக்கிறாள்.

இவள், பாட்டியின் கையைப் பிடித்துத் தள்ளி விடுகிறாள்...

இதற்குள் நர்ஸின் அதட்டல்...

''சும்மாயிருங்கம்மா.. பேஷண்ட் தூங்கறதே அபூர்வமா இருக்கு.. சார், இவங்களை வெளியில அழைச்சிட்டுப் போங்க...''

''நான் ஒண்ணும் செய்யலேம்மா... குழந்தை காதுப் பக்கம் ரத்தம் வழிஞ்சு காய்ஞ்சு கிடக்கு.. துடைச்சேன்..''

''அதெல்லாம் அப்படித்தான் இருக்கும்... ஹெட் இன்ஜுரி இல்லே... இந்த மட்டும் உங்க பொண்ணு பிழைச்சாளேன்னு சந்தோஷப் படுங்க...''

''சந்தோஷமா... எனக்கா... ஐயோ... கடவுளே, நாங்க உனக்கு என்ன கெடுதல் செஞ்சோம்...''

தொடர்ந்து 'மடேல் மடேல்' - என்று சப்தம்...

''இந்தா... நீ இப்படி வரப் போறியா இல்லையா?''

அப்பா, சப்தமான குரலில் அதட்டுகிறார்.

மீராவின் மூடிய கண்களுக்குள் வர்ணங்கள் சுழன்று, சுழன்று - கடைசியாய் பச்சையில் வந்து நிற்க...

மெத்தென்ற புல் தரையில் படுத்திருப்பது போன்ற பிரமை...

பக்கத்திலேயே - அவள் மீது தனது பாதி உடலைச் சாய்த்தபடி கீர்த்தி...

''ஐயோ... அப்படிப் பார்க்காதீங்கோ...''

''வேற எப்படிப் பார்க்க?''

''முதல்லே அந்த மூக்குக் கண்ணாடியக் கழட்டுங்கோ...''

''ஏன்?''

''கண்ணாடியில என் முகம் தெரியறது. வெட்கமா இருக்கு...''

''அப்ப இருக்கட்டும்....''

''......''

''நீ வெட்கப்படறதைப் பார்க்க எனக்குப் பிடிக்கும்...''

''இருங்க... யாரோ வர்ற மாதிரி இருக்கு...''

''ஃபார்முல ஒரு ஈ காக்கா கிடையாது....''

''இல்லே... 'கடகட'ன்னு மோட்டார் சைக்கிள் சப்தம் கேட்கலை... உங்க கிளாஸ் மேட்... அதான் எம். எல். ஏ. பிள்ளை...'

''மக்கு.. அ வ ன் எங்கே பெங்களூர் வந்தான்... ஆமா.. இந்த நெக்லஸ் புதுசா?''

மீரா, இருப்புக் கொள்ளாமல் நெளிகிறாள்...



''ஏய், பேஷண்ட் கையை அசைச்சிட்டே இருக்கு பாரு... இந்த சாந்தி எங்கே... டிரிப்ஸ் ஏத்தற சமயத்துல பக்கத்துல இருக்க வேண்டாமா?''

கொஞ்சம் பலத்த குரலில் ஒலிக்கிறது. மீரா திரும்பிப் படுக்க முயற்சி செய்கிறாள்.

''எங்களையும் பக்கத்துல இருக்க விட மாட்டேங்கறீங்க; நீங்களும் ஒழுங்காக் கவனிச்சுக்கறதில்லே... பேசாம என் செல்லத்தை என்கிட்டக் கொடுங்க... நான் மெட்ராஸுக்கு எடுத்திட்டுப் போறேன். இந்தக் கஷ்டத்தைப் பார்க்கச் சகிக்கலே!''

அம்மாவின் குரல், இப்பொழுது சற்றுத் தெளிவாகவே கேட்கிறது மீராவுக்கு.

தன் மீது சாய்ந்திருக்கும் கீர்த்தியை இடது கையால் நகர்த்த முயற்சி செய்கிறாள் அவள்.

''கொஞ்சம் இருங்க... அம்மா எதுக்காக அழுறான்னு பார்த்துட்டு வந்துடறேன்...''

அவன், அவளைப் பிடித்துப் புல் தரையிலேயே தள்ளுகிறான்.

''அம்மாக்களுக்கு வேற வேலை என்ன? கட்டில் இல்லே, மெத்தை இல்லே... தலைகாணி ஸாட்டின்லே தைக்கலே.. மெத்தைக்கு மேலே போடற விரிப்பு கலர் சுமார்னு ஏதாவது சொல்லிட்டே தான் இருப்பாங்க. நமக்கு, இதெல்லாம் ஒரு பெரிய விஷயமே இல்லைங்கறது பெரியவங்களுக்குத் தெரியாது... நீ பேசாம படு...''

''பாவமா இருக்கு அம்மாவைப் பார்த்தா... ப்ளீஸ்...''

இப்பொழுது அவள் நன்றாகவே விழிகளைத் திறந்து பார்க்கிறாள்.

கடைசி கடைசியாய்... என்ன நடந்தது?

''கேள்வியை நீ கேட்கிறாயா... அல்லது நான் கேட்கட்டுமா...''

சிவாஜி கணேசன் விழிகளை உருட்டிக் கேட்கிறார்..

அடுத்த கணம் -

ஐயோ... அது என்ன இத்தனை சப்தம்.. புகை... நெருப்பு... கமறல்...

அவள் சிரமப்பட்டுத் தலையைத் திருப்புகிறாள்...

அப்பா...

தஞ்சாவூரிலிருந்து அன்று காலையில் ரயிலுக்குப் புறப்பட்ட அப்பா - எத்தனை குஷியாய், எத்தனை ஸ்டைலாய் இருந்தார்?

மீராவுக்கு அவள் அப்பாவின் கம்பீரம் பிடிக்கும். எப்போதும் 'பளிச்'சென இருப்பார். நெஞ்சை சற்றே நிமிர்த்திக் கொண்டு நிற்பார்.

பெண்ணின் கல்யாணத்துக்குப் பிறகு இந்த நிமிர்த்தல் இன்னும் கொஞ்சம் அதிகமாகியே இருப்பது போல பிரமை...

''என்னை மாதிரி யாராலே முடியும்?''

கண்களும், உதடுகளும் பெருமிதத்தில்

பொங்கிப் புன்னகையாய்ப் பெருகியது எங்கே...

இப்பொழுது -

திடீரெனப் பத்து வருஷம் வயசு கூடி விட்டாற்போல் தலை நரைத்து, முகத்தில் வெள்ளையும் கருப்புமாய் முள் படர்ந்து...

''என்ன ஆச்சுப்பா...''

அவள் அதற்கு மேல் பேசச் சக்தி இல்லாதவளாய்ப் பார்வையாலேயே விளவுகிறாள்.

''ஒண்ணுமில்லேம்மா.. ஒரு சின்ன ஆக்ஸிடென்ட்.''

இதற்குள் அம்மா, பதறியடித்துக் கொண்டு ஓடி வருகிறாள்.

''இதப் பாருங்கோ... டாக்டர் ஏதோ மருந்து எழுதித் தந்தார் இல்லையோ... முதல்லே அதை வாங்கிட்டு வாங்கோ.



''நாங்கள் ஆட்சிக்கு வந்தால், அமைச்சர்களும், அதிகாரிகளும் லஞ்சம் வாங்குவதற்கு உச்ச வரம்பு கொண்டு வருவோம் என்று வாக்குறுதியளிக்கிறேன்!''

அப்புறம் பேசலாம்...''

''அலமு... நம்ம குழந்தை இப்பத்தான் கண்ணைத் திறந்து பார்த்துப் பேசறா...''

''தெரியும்.. அதனாலத்தான் சொல்றேன். முதல்லே போய் டானிக்கை வாங்கிட்டு வாங்கோ... அப்புறம் நிதானமாப் பேசலாம்னு...'

மீரா அம்மாவைப் பார்க்கிறாள்.

எங்கோ வெகு தொலைவிலிருந்து - வெயில் மழை பாராமல், நடந்து வந்தவள் போல இருக்கிறாள்.

நாற்பத்தியொன்பது வயசுக்கு, மீராவின் அம்மா, தன்னை நேர்த்தியாகவே அலங்கரித்துக் கொண்டிருப்பாள். ஏனோ தானோ வென்று முகம் கழுவிப் பொட்டு வைக்க அலமுவுக்குப் பிடிக்காது.

உடம்பு வேறு சற்று பூசினாற் போல இருந்தாலும் - சொன்னபடி கேட்கும். இயல்பிலேயே அடர்ந்த, கருத்த கூந்தல்.. அதை சற்றுத் தூக்கி - இழைய வாரி, பன் போல கொண்டை போட்டிருப்பாள். நிறைய நகைகள் போடுவதை விரும்பமாட்டாள். கலகலத்த மனுஷி என்பது முகத்தைப் பார்த்தாலே தெரிந்து விடும்.

அப்பேர்ப்பட்டவள் கசங்கிய புடைவையும், அள்ளி முடிந்த கூந்தலும், அழுதழுது வீங்கிப் போன முகமுமாய்...

அம்மா, மீராவின் பக்கத்தில் வந்தமர்ந்து, கையைத் தடவிக் கொண்டே இருக்கிறாள்.

''அம்மா... தாகமா இருக்கு...''

''டாக்டரைக் கேட்காம எதுவும் கொடுக்க கூடாது குழந்தை... ஆச்சு. இப்ப டாக்டர் வந்துடுவார்...''

தண்ணீர் குடிக்கக் கூடவா டாக்டரைக் கேட்க வேண்டும்?

மீரா, கண்களைத் திறந்து வைத்துக் கொள்ளப் பிரயத்தனப்படுகிறாள்... நாக்கு உலர்ந்து போய் ஒட்டிக் கொள்கிறது.

''வாட்டர் பேக் எங்கே?''

''என்கிட்ட இருக்கு...''

''எனக்குத் தாகமெடுத்தா என்ன செய்ய?''

''எழுந்து வந்து கேளுங்களேன்.. நாலஞ்சு ஸீட் பின்னாலேதானே இருக்கேன்..''

அவள், அம்மாவிடம் சிரமப்பட்டுக் கேட்கிறாள்.

''அம்மா... அவர் எங்கே?''

''......''

''எங்கேம்மா...''

''வெளில போயிருக்கார்...''

மீராவின் உதட்டில் ஐஸ் கட்டிகளைக் கொண்டு வந்து தேய்க்கிறாள் ஒரு நர்ஸ்.

''ரொம்ப தாகமா இருக்குங்கறாளே...''

''தண்ணியெல்லாம் கொடுத்துடாதீங்க... ஸெப்டிக் ஆயிடும்... மெள்ள ஆறிட்டு வருதுன்னு இப்பத்தான் டாக்டர் சொன்னார்...''

நர்ஸ், இதைச் சொல்லி விட்டுக் குதியுயர்ந்த செருப்பின் மெல்லிய தாளத்துக்கேற்ப அசைந்து அசைந்து செல்ல, கொஞ்ச நேரம் அவள் போன திசையையே வெறித்துப் பார்த்துக் கொண்டி ருக்கிறாள் மீரா.

'அன்று என்ன நடந்தது ..'

மறுபடியும் மனசுக்குள் இதே கேள்வி, தண்ணீர்ப் பந்து போலக் குதிக்கிறது...

பஸ்ஸுக்கு ஏதோ ஆயிடுச்சு...

'டமால்னு எத்தனாம் பெரிய சப்தம்...'

'அடேயங்கப்பா... குப்புனு எவ்வளவு வெளிச்சம்...'

'ஐயோ, அப்ப இவர் என்ன ஆனார்?'

## ஒரு தேர்தல் வியப்பு!

வால் காகித
வாக்குச் சீட்டில்
நான் போட்ட
வட்ட முத்திரை,
எப்படி,
என் நெற்றியிலேயே
நாமமாய்ப் பதிகிறது?
-- பால. சித்தார்த்தன்.



நெஞ்சு ஒருமுறை துடிப்பை நிறுத்தினாற்போலிருக்கிறது.

''அம்மா...''

''என்னடா...''

''அவர் எங்கே?''

''வெளில போயிருக்கார். இதோ வந்திடுவார்...''

''பெங்களூர் போறேம்மா....''

''சரி. நீ இப்பத் தூங்கு...''

இதற்குள் அறை வாசலில் அப்பாவும், அவர் கூட கையில் டிபன் கேரியருடன் நாகு மாமாவும்.

மீரா - நாகு மாமாவுக்குப் பின், கீர்த்தி நிற்கிறானோ என்கிற சபலத்தில் விழிகளை அகற்றிப் பார்க்கிறாள்.

அவன் அங்கு இல்லை என்பது புரிந்த வுடன், கண்கள் அவளையுமறியாமல் மூடிக் கொள்கிறது.

அதிகம் யோசிக்க முடியவில்லை.

எண்ணம் வளர்ந்தால், தலையை வலிக் கிறது. காதுக்குள் 'ஓ'வென இரைச்சல் கேட் கிறது...

''ராத்திரி தூங்கினாளா?''

நாகு மாமாவின் கணீரென்ற குரலை - எந்த ஆஸ்பத்திரி நர்ஸாலும் அடக்க முடியாது போலிருக்கிறது.

''எங்கே... வலி தாங்காம ஒரே அனத் தல்தான். காம்போஸ் ஊசி போட்டா அஞ்சு நிமிஷம் தூங்கறா...''

''நினைப்பு வந்து ஏதாவது கேட்டாளா?''

''இப்பத்தான் சித்த முந்தி... துண்டு துண்டா ஏதோ பேசினா.. 'அவர் எங்கே' ன்னு ரெண்டு மூணு தடவை கேட்டுட்டா.. நான் இவளை எப்படி தேற் றப் போறேன்னு தெரியலையே.. அம் பிகே... கல்யாணத்துக்கு முன்னாலே மாவி ளக்கு, சுமங்கலி பிரார்த்தனை எல்லாம் தானே செஞ்சேன்... என்னை இப்படி மோசம் செஞ்சிட்டியே...''

''த்சொ... த்சொ.. அழப்படாது. நீங்க இப்படி கலங்கினா - சார் என்ன செய்வார்.. இந்த நேரத்துல நீங்கதான் அவருக்கும், மீராவுக்கும் பக்கபலமா... அங்கே பாருங்கோ... வீடே அல்லோல கல்லோலப் படறது... என் அக்கா, பச்சைத் தண்ணி பல்லுல படாமப் படுத்துக் கிடக்கா.. கீர்த்தி அப்பாவுக்கு நடுவுல ஒரு தடவை அட்டாக் வந்துடுத்து...''

''......''

''சொல்லவேசங்கடமாயிருக்கு. இன்னிக் குப் பத்தாம் நாள் காரியம்...''

''ஐயோ, சொல்லாதீங்கோ...''

அலமு, மெல்லிய குரலில் அவசரமாய்க் குறுக்கிட, மீராவின் தலைக்குள் ஏகப்பட்ட பூச்சிகள் ஊர்வது போல...

அவள் மெள்ளப் பேசுகிறாள்.

''அம்மா...''

''என்னடா கண்ணு...''

''பாட்டி போயிட்டாளா?''

''பாட்டியா?''

அம்மா, ஒரு கணம் ஒன்றும் புரியாமல் விழிக்கிறாள்.

''நாகு மாமா... பத்தாம் நாள்... பாட்டி போயிட்டாளா...''

அது நேரம் வரையில் அடக்கி வைக்கப்பட்டிருந்த அலமுவின் துக்கமெல் லாம் - தண்ணீர்ப் பானையைக் கீழே போட்டுஉடைத்தாற்போல - 'பொட்'டென உடைந்து விட்டது...

''என் கண்ணே... தெய்வத்துக்குக் கண்ணில்லையடி. நடக்கக் கூட முடியாம, எப்ப எமன் வந்து கூப்பிடுவான்னு காத்திட்டிருக்கிற கிழங் கட்டையெல்லாத் தையும் விட்டுட்டுப் பூவையும் பிஞ்சையும் பறிச்சிட்டுப் போனானே.. என் தங்கமே... அவனோட முகூர்த்த வேஷ்டியப் பத்திரமா சுருட்டிக் கையோட வச்சிட்டிருந்தியே... அவனைத் தோத்துட்டியே,... மலை மலையா நாங்க எல்லாரும் இருந்து - அவ னோட திவசத்தைக் கொண்டாடறோமே... இதைக் கேட்பார் இல்லையா?''

மீரா, தன்னை மறந்து, கண்களை அழுத்தும்உறக்கத்தைவிரட்டி, விருட்டென எழுந்து உட்கார முயற்சி செய்கிறாள்.

கையில் செருகியிருந்த ரப்பர் டியூப், ஊசியுடன் அறுந்து விழுகிறது..

''அம்மா...''

அதற்கு மேல் பேச முடியாதவளாய் மயங்கிச் சாய்கிறாள் அவள்...

(தொடரும்)

# மகாராஷ்டிரம்:

## சிவசேனாவின் செல்வாக்கு இ. காங்கிரஸைப் பாதிக்குமா?

**இ.** காங்கிரஸின் கோட்டைகளாகக் கருதப்பட்ட வட மாநிலங்களிலெல்லாம், கடந்த தேர்தலில், அதன் செல்வாக்கு, சரிந்து கொண்டே வந்தபோது, மகாராஷ்டிரத்தில் மட்டும் தலைநிமிர்ந்து நின்று, தன் செல்வாக்கைத் தக்க வைத்துக் கொண்டது. அதற்குக் காரணம் சரத் பவாரின் சாணக்கியமும் ராஜதந்திரமுமே என்று எல்லோரும் அன்று கூறினர்.

அதுபோலவே, இந்தத் தேர்தலிலும் பவாரால் தமது செல்வாக்கைக் காட்ட முடியுமா என்பதுதான் இன்றைய கேள்வி.

''இந்தத் தேர்தலில் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கும் போதே சரத் பவாரின் வெற்றி தெரிந்துவிட்டது! அரச பரம்பரையைச்சார்ந்த மராத்தியர்கள், சர்க்கரை ஆலை முதலாளிகள், மற்றும் பசை உள்ளவர்கள் என்று, வெல்லும் சாத்தியம் அறிந்து, வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்ததில் பவாரின் சாணக்கியம் தெரிகிறது'' என்று பலர் சொல்கிறார்கள். வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்ததில் மாத்திரமல்ல; உட்கட்சிப் பூசல்களைச் சமாளிப்பதிலும் பவார் கெட்டிக்காரர். அவரது மந்திரி சபையிலிருந்த சிலரும் வி. என். காட்கில் போன்ற கட்சியில் செல்வாக்கு மிகுந்தவர்களும் சேர்ந்து கொண்டு, அவரை உலுக்க முயன்றாலும், தஞ்சாவூர்த் தலையாட்டி பொம்மை போல், மீண்டும் தம் நிலைக்குத் திரும்பி, மேலும் பலம் பொருந்தியவராகக் காட்சி தருகிறார், அவர்! அதுவும் இங்கு நாடாளுமன்றத் தேர்தல் மட்டும்தான் நடக்கிறது என்பதால், தமது முழு கவனத்தையும் இந்தத் தேர்தலில் அவரால் செலுத்த முடியும் என்கிறார்கள். இது மட்டுமல்ல; இந்தியாவின் மிகப் பெரிய ஸ்டாக் மார்க்கெட்டான பம்பாய் தலால் தெருவில், மனு தாக்கல் செய்யும் கடைசி நாளன்றே இ.காங்கிரஸுக்குத்தான் வெற்றி வாய்ப்பு அதிகம் என்ற ஊகத்தில் பங்கு விலைகள், கிடுகிடுவென ஏறின.

மக்கள் வேண்டுவது மண்டலா, மந்திரா அல்லது மாற்றமற்ற ஸ்திரமான ஆட்சியா? இதை ஆராயப் புகுந்தால், கடந்த ஒன்றரை ஆண்டு அனுபவத்தில் மக்கள் மிதமிஞ்சிய வெறுப்பில் இருப்பதாகவே தெரிகிறது. பத்திரிகைகளில் கடிதங்கள் எழுதும் பலரும், 'நாம் மானம் ரோஷம் உள்ளவர்களாக இருந்தால், நம்மை இந்தக் கதிக்கு ஆளாக்கிய சென்ற லோக் சபா அங்கத்தினர் ஒருவருக்குமே இந்தத் தேர்தலில் வாக்களிக்கக் கூடாது' என்று எழுதுகின்றனர்! மிக அதிக அளவில் உயர்ந்துள்ள விலைவாசிக்கு ஸ்திரமற்ற ஆட்சியே காரணம் என்று நம்புகிறார்கள். இப்படி அடிக்கடி தேர்தல்கள் நடந்து, அரசுச் சார்பிலும் கட்சிகள் சார்பிலும் கோடி கோடியாகப் பணம் வாரி விடப்பட்டால் நாட்டின் பொருளாதாரம் என்ன ஆவது?' என்று பலரும் கேட்கின்றனர்.

**வி.** பி. சிங், தமது தேர்தல் பிரசாரத்தை மாநிலத்தின் பின்தங்கிய பகுதியான ஔரங்காபாதில் துவக்கியபோது, அவர் பேச்சைக் கேட்க, மக்கள் திரள் திரளாகக் கூடினர். ஆனால் 'கூட்டங்கள் வோட்டுக்களாக முடியாது' என்கின்றனர் எதிர்க்கட்சியினர். 'ஜாதி அடிப்படையில் இவர் நாட்டைத் துண்டாட முயல்வது கலப்படமற்ற சுயநலம்' என்பது அநேகரது கணிப்பு. 'ஒன்றரை ஆண்டில் இன்னொரு தேர்தல்

பவார் : சாணக்கியம்!



வருவதற்கும், நாட்டின் பொருளாதார வீழ்ச்சிக்கும் காரணம் இவர்தான்' என்ற எண்ணமும் பலரிடையே வேரூன்றி இருக்கிறது. கூடவே, ஜனதாதள மாநிலத்தலைமையும் எதிர்ப்புக்குள் ளாகியிருக்கிறது. மாநிலத் தலைவரான திருமதி மிருணாள் கோரே, தமது பல்வேறு போராட்டங்களால் ''பானிவாலி பாயி'' என்று பலராலும் விரும்பப்பட்டவரானாலும் இன்று அவரது கட்சிக் காரர்களே 'எதேச்சாதிகாரி' என்று எதிர்க்கிறார்கள். இன்னும் கூட மகாராஷ்டிர ஜனதா தளம் உட்கட்சிப் பூசல்கள் மிகுந்ததாகவே இருக்கிறது! இந்நிலையில் இ.காங்கிரஸை எப்படித் தோற்கடிக்க முடியும்?

சிவசேனா, போன தேர்தலில் பல இடங்களை வென்றாலும் இரண்டு உயர்நீதி மன்றத் தீர்ப்புகளுக்குப் பிறகு, ஆட்டம் கண்டிருக்கிறது. 'நான் இந்து என்று கௌரவத்தோடு சொல்' என்பது பால் தாக்கரே கொடுத்த தாரக மந்திரம். 'இந்துத்துவத்தை முன் வைத்துத் தேர்தலில் போட்டியிட்டது அரசியல் சட்டத்திற்கு விரோதமானது' என்று பம்பாய் உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்து, இரு சிவசேனா எம். எல். ஏ.க்களைப் பதவி இழக்க வைத்து விட்டது. 'நான் இந்து என்று சொல்லி வாக்குக் கேட்பதில் பெருமைப் படுகிறேன். இவர்கள் யார் சொல்வது நான் இந்து என்று சொல்லக் கூடாது என்று?' என அத்தீர்ப்பை தாக்கரே அலட்சியப் படுத்தினாலும், உள்ளே அவர்களை கிலி வாட்டத்தான் செய்கிறது!

குடியானவர் இயக்கத் தலைவரான சரத் ஜோஷி தாக்கரேவுக்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தி இருக்கிறார். ''எங்கெல்லாம் சிவசேனாவினர் பேசுகி றார்களோ, அங்கெல்லாம் என் ஆட்களை அனுப்பி, அவர்கள் பேச்சுக்களை 'டேப்' செய்வேன்! அரசியல் சாசனத்திற்கு மாறாக எதுவும் பேசப்பட்டால், தேர்தலை எதிர்த்து வழக்குத் தொடுப்பேன்'' என்று சவால் விட்டிருக்கிறார். தாக்கரே, இது குறித்து சிவசேனாவின் பிரதான வக்கீல்களிடம் கலந்து ஆலோசித்து வருகிறார். அதனால் தங்கள் தேர்தல் கோஷத்தைத் தேர்ந்தெடுப்பதிலேயே சிவசேனாவுக்கு ஏகப்பட்ட தாமதம்.

தாக்கரேக்கு அடுத்த படி, சிவசேனாவின் பெரும் புள்ளிகளான சட்டமன்ற எதிர்க் கட்சித் தலைவர் ஜோஷி, முன்னாள் மேயர் புஜிபால் இருவரும் ஒருவரையொருவர் தாக்கிப் பேசியும் எழுதியும் வந்தது 'சிவ



தாக்கரே : உள்ளூர கிலி!

சேனா கட்டுப்பாடான கட்சி' என்ற பலரின் எண்ணத்தைப் போக்கி விட்டது. சிவசேனாவில் சமீபத்தில் நடந்த கொலைகள் வேறு இவர்கள் ஆட்சித் திறனைப் பற்றியும் சந்தேகத்தைக் கிளப்பி இருக்கிறது.

பாரதிய ஜனதா கட்சியைப் பொறுத்தவரை விதர்பா பகுதிகள் தவிர, மற்ற பகுதிகளில் அது இன்னும் வேரூன்றவேயில்லை.

கடந்த தேர்தலில் மகாராஷ்டிராவிலுள்ள 48 மக்களவைத் தொகுதிகளில் இ.காங்கிரஸ் 28 ல் வென்றது. இந்த முறை அதைவிட ஐந்திலிருந்து பத்துத் தொகுதிகள் வரை கூடுதலாகவே வெல்லும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. அரசியலை அலசும் இங்குள்ள அரசியல் நோக்கர்கள், இ.காங்கிரஸ், சிவசேனா - பி. ஜே. பி அணி, தேசிய முன்னணி, இதர கட்சிகள் ஆகியன முறையே 5 : 2 : 1 : 1 என்ற விகிதத்தில் வெற்றிபெறலாம் என்று கணிக்கின்றனர். பொதுவாக அமைதியை விரும்பும் மகாராஷ்டிரத்திலும் சில காலமாகவே வன்முறை தலைதூக்கியுள்ளதால் சில வாக்குச் சாவடிகளில் பெருமளவு கள்ள வோட்டுக்கள் போட முனைவார்கள் என்றும் தெரிகிறது.

எது எப்படியானாலும் இந்தத் தேர்தலால் பம்பாயின் ஜோசியர்கள், கைரேகை நிபுணர்கள் போன்றவர்கள் காட்டில் செமை மழை! தேர்தலுக்கு டிக்கெட் கிடைக்கும் வரை அது குறித்தும், கிடைத்த பிறகு வெற்றி வாய்ப்புகள் பற்றியும், அனைவரும் ஜோசியர்களை அணுகிய வண்ணம் இருக்கிறார்கள். பெரிய பெரிய ஹோட்டல்களில் அறை எடுத்துத் தங்கியுள்ள ஜக்ஜித் உப்பல், பிரசாந்தோ குமார் சக்கரவர்த்தி போன்ற ஜோசியர்களுக்குப் பேசவும் நேரமில்லை. இத்தனைக்கும் ஒரேயொரு கேள்விக்கே ஆயிரக் கணக்கில் பணம் வாங்குபவர்கள் இவர்கள்!

— ராஜீவி நரசிம்மன்.

"ரவீந்தரா! எங்கேப்பா போயிட்டு வர்றே?"

"டான்ஸ் புரோகிராம்பா. பிரண்ட்ஸுங்க ஏற்கெனவே டிக்கெட் புக் பண்ணியிருந் தாங்க அதான்..."

"நேரத்துக்கு வரலாமில்லையா? இப்போ மணி பதினொண்ணு ஆறதே! சாப்பிட்டியா?"

"சாப்பிட்டேம்பா."

"எங்கே?"

"ஹோட்டல்ல."

ஷூவைக் கழற்றி எறிந்து விட்டுப் படுக்கை அறைக்குச் சென்றான்.

ராமநாதனுக்கு அவனது நடவடிக்கை மனச் சங்கடத்தை உண்டு பண்ணியது. இவன் ஏன் இப்படி இருக்கிறான். இன்னு




மும் இவனுக்கு ஏன் பொறுப்புணர்ச்சி வரவில்லை? ஒருவேளை கல்யாணம் பண்ணி வைத்தால் வழிக்கு வருவானோ?

அவருக்கு பூர்வீகச் சொத்துக்கள் ஏகப்பட்டவை இருந்தன. சொந்தமாய் ஒரு பிளாஸ்டிக் தொழிற்சாலை நிறுவி, பல்லாண்டு காலமாய் அதை நல்ல முறையில் நடத்தி வந்தார். ஆனால் இப்போதெல்லாம் வயோதிகத்தின் காரணமாய், அவரால் முன்பு போல் இயங்க முடிவதில்லை. பிறந்தது ஒரே மகன். அவன் என்னடா வென்றால் இந்தக் கதி! தாயில்லாத பிள்ளையென்று அதிகச் செல்லம் கொடுத்து வளர்த்தது தவறாகி விட்டதோ என்று எண்ணினார். கடந்த ஒரு வருடமாய் அவனைதாம்பத்திய வலைக்குள் சிக்கவைத்திட வேண்டுமென்று அவரும் எவ்வளவோ முயற்சி செய்து வந்தார். ஆனால் எதுவும் நடந்தபாடில்லை. அவன் பாட்டுக்கு ஏதோ சால்ஜாப்புகள் சொல்லிக் கொண்டேயிருந்தான்.

போன தடவை பார்த்து விட்டு வந்த பெண்ணைப் பற்றிக் கேட்ட போது கூட அவனது அபிப்ராயம் அவருக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை.

"ஏம்பா, போன மாசம் சேலத்துல ஒரு பெண்ணைப் பார்த்துட்டு வந்தோமே அதைப் பத்தி நீ ஒண்ணும் சொல்லவே இல்லையே."

"பொண்ணு சுமாரா இருக்கா. ஆனா மாடர்னா எதுவும் சொல்லிக்கிறா மாதிரி இல்லை. இங்லீஷ் நாலெட்ஜ் அவ்வளவா இருக்காது போலிருக்கு. ஹாபீஸ் கூட எதுவும் கிடையாதுங்கறா. சரியான கன்ட்ரியா இருப்பா போலிருக்கே..."

"பொண்ணு நம்ம குடும்பத்துக்கு ஒத்துப் போவான்னு எனக்குப் படுது. முகத்துல நல்ல களை. அடக்கம், அந்தஸ்து எல்லாம் இருக்கு."

வேடிக்கையாய்ச் சிரித்தான் ரவீந்தர்.

"என்னப்பா நீங்க இன்னும் கி.மு. மாடல்லேயே இருக்கீங்க! இந்தக் காலத்து சொஸைட்டியப் பத்தி உங்களுக்கு எதுவுமே தெரியலையே..."

"அதில்லை ரவீந்தரா. எனக்கும் வயசாயி கிட்டே போவுது. உனக்குன்னு ஒருத்தி வந்துட்டான்னா என் கடமை பூர்த்தி ஆயிடும் இல்லையா? இன்னும் எவ்வளவு நாள்தான் தன்னிப் போட்டுக்கிட்டே இருப்பே? பாக்டரியிலும் நாளுக்கு நாள் டென்ஷன் ஜாஸ்தி ஆயிக்கிட்டே வருது. ஒரு பக்கம் ஒர்க்கர்ஸ் ப்ராப்ளம் வேற."

"பாக்டரிக்குத்தானே வரணும்? வந்துடறேன்."

அவனது கவனம் முழுதும் வேறெங்கோ இருந்தது. சீரியஸாய் மோட்டர் பைக் சாவியைத் தேடிக் கொண்டிருந்தான்.

ஒரு விடுமுறை நாள் காலை கேமரா, சூட்கேஸ் சகிதம் அவரெதிரே தோன்றினான்.

"எங்கேப்பா கிளம்பிட்டே?" அப்பா கேட்டார்.

"டூர் புரோகிராம்பா. நேத்து உங்ககிட்டே சொல்லவே மறந்துட்டேன். நைனிதால், சிம்லா, ஆக்ரா... இப்படி நிறைய இருக்கு. வர எப்படியும் ஒரு மாசம் ஆகும்."

"அவ்வளவு நாள் ஆகுமா?"

"ஆமாம்பா. புரோகிராம் டைட்டா

மதுமனோ

இருக்கு.''

ராமநாதனுக்கு மகனின் போக்கு வருத்தத்தையும் கோபத்தையும் ஏற்படுத்தியது. ஆனாலும் எதையும் வெளிப்படுத்தவில்லை. மனசுக்குள்ளேயே அடக்கிக் கொண்டு அமைதியாய்ப் பேசினார்.

''ரெண்டு வாரத்துல வர ட்ரை பண்ணேன் ரவீந்திரா. இந்த மாசம் இருபதாம் தேதியிலேருந்து ஆடிடிங் இருக்கு. நீயும் கூட இருந்தா நல்லா இருக்கும்.''

''சரி. ட்ரை பண்றேம்பா.''

அவன்திரும்பிவரஒருமாதத்திற்குமேல் ஆயிற்று. அப்போதும் அப்பா அவனை நல்ல மாதிரியாகவே விசாரித்தார்.

''டூர் எல்லாம் நல்லபடியா நடந்துச்சா?''

''பிரமாதமா என்ஜாய் பண்ணினேம்பா!''

''நாளைக்கு நாம ஒரு இடத்துல பெண் பார்க்கப் போறோம். நீ தயாரா இருக்கணும்.''

''மறுபடியும் ஆரம்பிச்சுட்டீங்களா?''

''ரவீந்திரா... நான் உனக்கு ஏத்த பெண்ணைத்தான் பார்த்து வைச்சிருக்கேன். உனக்கு அந்தப் பெண்ணை நிச்சயம் பிடிக்கும். நீ வேணும்னா பாரேன்.''

சம்மதித்தான்.

வீட்டில் நுழைந்ததுமே பெண் எதிர்ப்பட்டாள்.

ரவீந்தரைக் கண்டதும் நாகரிகமாய் 'விஷ்' பண்ணினாள். ''ஹாய்! ஆர் யு மிஸ்டர் ரவீந்தர்?''

''ய்யா!''



''ப்ளீஸ் டேக் யுவர் சீட்...''

அவள் உள்ளே சென்றதும் அப்பா அவன் காதில் கிசுகிசுத்தார். ''இதாடா பொண்ணு. பேர் ரூபிணி. எப்படியிருக்கா

ரவீந்தர் அவள் சென்ற திசையிலேயே பார்த்துக் கொண்டிருந்தான். சமீபத்திய பாம்பே மாடல் மிடியில் அவள் பார்க்கக் கச்சிதமாய் இருந்தாள். அப்பா அவளைத் தேர்ந்தெடுத்தது அவனுக்கே பெரும் ஆச்சரியமாக இருந்தது. இப்படியொரு நாள் அவர் தம்மை மாற்றிக் கொள்ளக் கூடுமென்று அவன் எதிர்பார்க்கவில்லை.

உள்ளிருந்து பெண்ணின் பெற்றோர் வந்தனர். ராமநாதனுக்கு வணக்கம் சொல்லி விட்டு அவரெதிரே உட்கார்ந்தார்கள்.

''நல்லது. பையன் என்ன படிச்சிருக்காப்பலே?'' பெண்ணின் அப்பா கேட்டார்.

''எம்.காம். படிச்சிருக்கான். என்னோட பிஸினஸைப் பார்த்துக்கிட்டிருக்கான்.''

''வெரிகுட்.''

அவர் பார்க்க மிடுக்காய் இருந்தார். பார்வையில் ஒரு கம்பீரமும் பேச்சில் ஒரு சாதுர்யமும் இருந்தன.

காரம், இனிப்பு வகைகளுடன் ரூபிணி வந்தாள். எல்லோருக்கும் பரிமாறி விட்டு ரவீந்தர் எதிரே உட்கார்ந்தாள். இந்த முறை வேறு மாதிரியான உடையில் இருந்தாள். அதில் அவளது உடலமைப்பு இன்னும் வசீகரமாய் இருந்தது. ரவீந்தர் ஏகமாய்ச் சொக்கிப் போனான். அறை பூராவும் வண்ண வண்ணப் புகைப்படங்கள்.

''எல்லாம் நான் எடுத்த போட்டோதான். எப்படி! நல்லா இருக்கா?'' என்றாள் அவள் பெருமையுடன்.

''எக்ஸலெண்ட் போட்டோகிராபி!''

''நாவல்ஸ் படிக்கிறது கூட எனக்கு ரொம்பப் பிடிக்கும்.'' ஆங்கில எழுத்தாளர்களின் பெயர்களை வரிசைப்படுத்தினாள். புளகாங்கிதம் அடைந்தான் ரவீந்தர்.

''அப்புறமா வாங்க. உங்களுக்கு நிறைய புக்ஸ் தரேன்!''

''ஷ்யூர்.''

ரவீந்தருக்கு அவளது வெளிப்படையான சுபாவம் மிகவும் பிடித்திருந்தது. தான் அவளைப் பெண்பார்க்க வந்திருக்கிறோம் என்பதையே மறந்து அவளுடன் அன்னியோன்யமாய்ப் பழகினான்.

விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்து காரில் ஏறி உட்கார்ந்ததும் அப்பா கேட்டார், ''என்ன ரவீந்திரா பெண்ணைப் பிடிச்சிருக்கா?''

''பிடிச்சிருக்குப்பா. நான் எதிர்பார்த்த அத்தனை அம்சங்களும் அவகிட்டே இருக்கு.''

''அப்ப புரஸீட் பண்ணலாமா?''

''சரிப்பா.''

ஒரு நாள் மதியம் அவர் சாப்பாட்டை முடித்துக் கொண்டு சற்று ஓய்வு எடுக்கலாமென்று மாடிக்குச் செல்ல இருந்த போது பதற்றத்துடன் ரவீந்தர் வந்தான்.

''அப்பா உங்ககிட்டே முக்கியமா ஒண்ணு சொல்லணும்.''

''என்ன...?''

''நான் காலையில ரூபிணி வீட்டுக்குப் போயிருந்தேம்பா.''

''அதுக்குள்ளே அவசரமா? என்ன சொல்றா கல்யாணப் பொண்ணு?''

''ஏதோ புத்தகம் தரேன்னு வரச் சொன்னாப்பா. அதான் போயிருந்தேன். நான் அங்கே போனப்போ வீட்ல யாரோ




'வாயை மூடு' என்று முட்டாள் தன் மனைவியைத் திட்டுகிறான். ''நீ அமைதியாக இருக்கும் போது எவ்வளவு அழகாக இருக்கிறாய் தெரியுமா?'' என்கிறான் புத்திசாலி. அதுதான் புத்திசாலிக் கணவனுக்கும் முட்டாள் கணவனுக்கும் உள்ள வேறுபாடு!

-- வாரியார்.

-- வயலூர் பார்த்திபன்.

ஒருத்தன் உட்கார்ந்திருந்தாம்பா. அந்த ரூபினி அவனோட ரொம்ப நெருக்கமாத் தொட்டுப் பேசிக்கிட்டிருந்தா. என்னால அதைச் சகிக்க முடியலை. ஷி மஸ்ட் பி எ பேட் கேரக்டர்.''

''ரவீந்தரா! உனக்கு இந்த மாதிரி யெல்லாம்சந்தேகம்வரக்கூடாதுப்பா.ஹை சொஸைடி பொண்ணு கொஞ்சம் ப்ரீயாப் பழகறா. இது ஒண்ணும் பெரிய விஷய மில்லையே. கல்யாணத்துக்கப்புறம் படிப் படியா மாத்திடலாம்.''

''அப்பா ப்ளீஸ்! நான் சொல்றதைக் கேளுங்க. அந்தப் பொண்ணு எனக்கு வேண்டவே வேண்டாம்.''

''என்ன சொல்ற நீ? திடீர்னு இப்படிச் சொன்னா நான் என்ன பண்ண முடியும்? அவசரப்படாம தீர யோசிக்கச் சொல்லு.''

''இதுல யோசிக்கிறதுக்கு ஒண்ணுமில் லேப்பா. அந்தப் பொண்ணை என்னால கல்யாணம் பண்ணிக்க முடியாது. அவ்வளவுதான் என்னால சொல்ல முடி யும்.''

''அப்ப நீ கல்யாணமே பண்ணிக்க மாட்டியா?''

''பண்ணிக்கறேன். நீங்க பார்த்துச்சரின்னு சொன்ன சேலத்துப் பெண்ணைக் கல்யா ணம் பண்ணிக்கிறேன்.''

அன்றே சேலத்தில் பார்த்து விட்டு வந்த பெண் வீட்டாருக்குக் கடிதம் எழுதினார்.

மூன்றே நாட்களில் சேலத்திலிருந்து ரவீந்தர் பெயருக்குப் பதில் கடிதம் வந்தது. அதை அந்தப் பெண்ணே எழுதியிருந்தாள்.

''திரு. ரவீந்தர் அவர்களுக்கு, வணக்கம். முதலில் என்னை வேண்டாமென்று மறுத்த தங்களிடமிருந்து இப்போது வந்திருக்கும் 'சம்மதம்' எனக்கு ஆச்சரியத்தையளித் தது. முன்பு நான் தங்களுக்கு 'நாட்டுப்புறமாகத்' தெரிந்தவள், இப்போது மட்டும் எப்படித் திடீரென்று 'மாடர்னாக' மாறினேன் என்று எனக்கே தெரியவில்லை. ஒரு பெண்ணின் ஆடையலங்காரங்கள்தான் அவளின் முற் போக்கு எண்ணங்களுக்கான அளவு கோல் என்பது எத்தனை பெரிய பிற்போக் குத்தனம்! தங்களின் அந்தப் பிற்போக் குத்தனம் ஏற்படுத்திய வடு, தங்களைக் காணும்போதெல்லாம் உறுத்திக் கொண்டே யிருக்கும் என்பதால், எனக்கு இந்தத் திருமணத்தில் சம்மதமில்லை. ஸாரி. இருப் பினும் தங்களின் மனமாற்றத்திற்கு எனது மகிழ்ச்சியையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். விஷ் யு ஆல் த பெஸ்ட்!''

# கேரள நிலவரம் எப்படி?

தமிழ்நாட்டைத் தொட்டு கேரள மாநிலம் இருந்தாலும், தேர்தலைப் பொறுத்த மட்டில் தமிழ்நாட்டிலிருந்து வித்தியாசப் பட்டு நிற்பது கேரளம். சமீபத்தில், கேரளாவில் நடைபெற்ற மாவட்ட கவுன்சில் தேர்தலில், ஆளுங்கட்சியான இடதுசாரி ஜனநாயக முன்னணி, பெரும்பான்மையான இடங்களைப் பெற்று, பெரும் வெற்றி கண்டது. இதனால் ஏற்பட்ட ஊக்கத்தில் சட்டமன்றத் தேர்தலுக்கு இன்னும் ஓராண்டு இருக்கும் போதே, சட்டமன்றத்தைக் கலைத்துவிட்டுப் பாராளுமன்றத் தேர்தலோடு சட்டமன்றத் தேர்தலையும் சேர்த்து நடத்தப் பரிந்துரை செய்து, தேர்தலும் நடக்கிறது.

இப்போது நடைபெறவிருக்கின்ற, பாராளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்கள், பல தலைவர்களின் - பல அரசியல் கட்சிகளின் தலைவிதியை நிர்ணயிக்கிற ஒரு முக்கியமான தேர்தல். கேரளாவில் மீண்டும் இடதுசாரி ஜனநாயக முன்னணி ஆட்சியைப் பிடிக்குமா? ஈ. கே. நாயனார் மீண்டும் முதல்வராக முடியுமா? அல்லது, காங்கிரஸ் உள்ளிட்ட வலதுசாரி ஜனநாயக முன்னணி ஆட்சியைப் பிடிக்குமா? மூன்றாவது அணியான பி. ஜே. பி. யின் வெற்றி வாய்ப்பு எப்படி? இவைதாம் இன்றைய கேள்விகள்.

மனு தாக்கல் செய்த நாளிலிருந்தே கேரள வேட்பாளர்கள் பிரசாரத்தைத் தொடங்கி விட்டார்கள். ஆனால், மக்களிடையே தேர்தல் பற்றிய எந்தவிதமான பரபரப்பையும் காண முடியவில்லை. தங்களுடைய அலுவல்களுக்குப் பிறகுதான், மீதி நேரத்தை அரசியலுக்கு ஒதுக்குகிறார்கள். சுவர் விளம்பரங்களிலும் கட்சிக் கொடிகள் கட்டுவதிலும் பிரசாரம் செய்வதிலும், ஒரு நாகரிகத்தைக் கடைப்பிடிக்கிறார்கள். தமிழ்நாட்டில் மாதிரி பொது இடங்களை அசுத்தப்படுத்துவதில்லை. நூறு அடி, நூற்றைம்பது அடி பெரிய பெரிய கட்-அவுட்களைக் காணவே முடியவில்லை! தேர்தல் காரியாலயங்களில் அமைதி நிலவுகிறது.


நாயனார்

தேர்தல்கேட்ட கேரள மந்திரிசபையில்,


● சாரலன்: ''மத்தியிலும் இந்த மாநிலத்திலும் காங்கிரஸ் ஆட்சிதான்!''

போக்குவரத்துத் துறை அமைச்சராக இருப்பவரும், தற்போது, திருவனந்தபுரம் கிழக்குசட்டமன்றத் தொகுதியில் இடதுசாரி ஜனநாயக முன்னணியின் சார்பில் ஐந்தாவது முறையாகப் போட்டியிடுபவருமான சங்கர நாராயணப் பிள்ளையைச் சந்தித்து, ''இந்தத் தேர்தலில் எந்த அணிக்கு வெற்றி வாய்ப்பு அதிகம்?'' என்று கேட்ட போது, ''இங்கு மீண்டும் இடதுசாரி ஜனநாயக முன்னணியே பெரும்பான்மையான இடங்களைப் பெற்று ஆட்சியைப் பிடிக்கும்!'' என்றார், உறுதியாக.

''சமீபத்தில் நடைபெற்ற ஜில்லாக் கவுன்சில் தேர்தலில், இடதுசாரி ஜனநாயக முன்னணி, பெரும்பான்மையான இடங்களைப் பெற்றதை வைத்து இப்படிக் கூறுகிறீர்களா?''

''அது மாத்திரம் காரணமல்ல. இடதுசாரி ஜனநாயக முன்னணி, ஆட்சியைப் பிடித்த பிறகு நடைபெற்ற நான்கு இடைத் தேர்தல்களிலும், இ. காங்கிரஸின் கோட்டைகளாக இருந்த தொகுதிகளை நாங்களே பெற்றோம். இதுவும் ஒரு காரணம். மேலும், தமிழ்நாட்டு அரசியலுக்கும் கேரள மாநில அரசியலுக்கும் நிறைய வித்தியாசம் உள்ளது. தமிழ்நாட்டில் ஒவ்வொரு கட்சி

யும் ஒரு தனிப்பட்ட மனிதரின் செல்வாக்குக் கொண்டதாகவே இருக்கிறது. ஆனால், இங்கு முதலிடம் கட்சிக்குத்தான். இரண்டாவதாகத்தான் தனி மனித செல்வாக்கு எல்லாம்! இதோடு, இங்கு மதச் சார்பான



● சங்கரநாராயண பிள்ளை: பந்தா இல்லாத அமைச்சர்.

அரசியல் இல்லை. கட்சி சார்பான அரசியல்தான் உள்ளது!'' என்ற போக்கு வரத்துத்துறை அமைச்சர், மிகஎளிமையாகக் கால்நடையாகவே வோட்டுக் கேட்கப் புறப்பட்டார். அவர் பின்னால், நூற்றுக் கணக்கில் கார்கள் இல்லை. ஆர்ப்பரிக்கும் தொண்டர்களும் இல்லை!

கேரள மாநில பி. ஜே. பி. தலைவரும், தற்போது, திருவனந்தபுரம் கிழக்குத் தொகுதியில் பாரதிய ஜனதா கட்சியின் சார்பில் போட்டியிடுபவருமான கே. ராமன் பிள்ளையைச் சந்தித்துக் கேரளத் தேர்தலில் பி. ஜே. பி. யின் வெற்றி வாய்ப்புகளைப் பற்றிக் கேட்டோம்.

''இதுவரை எல்லோரும் உங்களிடம், 'நடந்து முடிந்த ஜில்லா கவுன்சில் தேர்தலில் பி. ஜே. பிக்கு வெறும் இரண்டு இடங்கள்தான் கிடைத்தன. அதனால், கேரளாவில் பி. ஜே. பிக்குச் செல்வாக்கு இல்லை' என்று சொல்லியிருக்கலாம். ஆனால் பெற்ற இடங்கள் இரண்டுதான் என்றாலும் சுமார் பத்து லட்சத்திற்கும் அதிகமான வாக்குகளை நாங்கள் குவித்திருக்கிறோம்! என்பது கவனத்துக்குரியது. ராமர் கோயில் கட்டுவதற்காக அத்வானி ரத யாத்திரை மேற்கொண்ட போது, கேரளாவில் எனது தலைமையில் ஜனசக்தி யாத்திரை ஒன்று மேற்கொண்டோம். அதில், சுமார் இருபது லட்சம் பேர் கலந்து கொண்டனர். ஆகவே, கேரளாவில் பி. ஜே. பியின் செல்வாக்கு குறைந்து விடவில்லை. இதை நடக்கவிருக்கும் தேர்தலும் உறுதிப்படுத்தும்!'' என்றார் அவர்.

இ. காங்கிரஸ் சார்பில் திருவனந்தபுரம் பாராளுமன்றத் தொகுதியில் மூன்றாவது



● கே. ராமன் பிள்ளை: ''பி. ஜே. பிக்குச் செல்வாக்கு உயர்கிறது.''

முறையாகப் போட்டியிடும் சார்லஸைச் சந்தித்து, இ. காங்கிரஸின் நிலைமையைப் பற்றிக் கேட்ட போது, ''கேரள அரசியலில் இந்தத் தடவை நிச்சயம் ஒரு மாற்றம் ஏற்படும். மத்தியில் இ. காங்கிரஸ் பெரும்பான்மை இடங்களைப் பெற்று ஆட்சி அமைப்பது போல, இந்த மாநிலத்திலும் எங்கள் கட்சி நிச்சயம் ஆட்சியைப் பிடிக்கும்! காரணம், நான்கு ஆண்டுகால இடதுசாரி ஜனநாயக முன்னணி ஆட்சியில் மக்களுக்கு ஒரு நன்மையும் ஏற்படவில்லை! இவர்கள் ஆட்சிக்கு வரும் முன்பு, ஆண்டு தோறும் சுமார் பத்து லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பு அளிப்போம் என்றார்கள். ஆனால், கடந்த நான்கு ஆண்டுகளில் நூறு பேருக்காவது வேலை கொடுத்திருப்பார்களா என்றால், இல்லவேயில்லை. அவர்களுக்குத் தோல்வி பயம் ஏற்பட்டு விட்டது. அதனால்தான் சமீபத்திய ஜில்லாக் கவுன்சில் வெற்றியை மனத்தில் கொண்டு, இன்னும் ஓராண்டு இருக்கும் போதே சட்டசபையைக் கலைத்துவிட்டு, பாராளுமன்றத் தேர்தலோடு சட்டமன்றத் தேர்தலையும் வைத்திருக்கிறார்கள்'' என்றார்.

நாம் பலரையும் நேரடியாகச் சென்று விசாரித்த போது, கேரள மாநிலத் தேர்தலைப் பொறுத்தவரை பெரும்பான்மையான எம். பி. தொகுதிகளை இ.காங்கிரசும் சட்டமன்றத்தில் பெரும்பான்மையான இடங்களை இடதுசாரி ஜனநாயக முன்னணியும் கைப்பற்றலாம் என்றே மக்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

இப்படி ஒரு மனிதனே இருவிதமாக வோட்டளிப்பது சாத்தியமா என்றால் கேரள மக்கள் சிந்தித்துச் செயல்படுபவர்கள். அவர்களைப் பொய்யான வாக்குறுதி மூலமாகவோ, சினிமாக் கவர்ச்சியின் மூலமாகவோ, பணத்தைக் காட்டியோ ஏமாற்ற முடியாது. ஆகவே, அவர்கள் மத்திய ஆட்சி வேறு, மாநில ஆட்சி வேறு என்று யோசித்துச் செயல்படக்கூடியவர்கள்தான் என்று பதில் கிடைக்கிறது.

கட்டுரை, புகைப்படங்கள்.

**பானு மணாளன்**

# சிவகாமியின் சபதம்

## முப்பதாம் அத்தியாயம்

## மாமல்லர் ஊகம்

பாறைகளின் மீது மோதாமல் தெப்பத்தைத் தீவின் ஓரமாய்ச் செலுத்துவதற்குக் குண்டோதரனும் மாமல்லரும் தங்களாலான மட்டும் முயற்சி செய்தார்கள். ஆனால் தெப்பம் நேரே பாறையில் மோதுவதற்கே போவதுபோல் அதிவேகமாகப் போயிற்று.

தெப்பத்திலிருந்தவர்கள் 'செத்தோம்' என்று தீர்மானித்தார்கள். சுகப்பிரம்மரிஷி அலறிக்கொண்டு பறந்து போய்ப் பாறையில் உட்கார்ந்து கவலையுடன் பார்த்தார்.

தெப்பம் பாறையில் மோதிற்று. பானைகள் சடசடவென்று உடைபட்டன. மூங்கில்கள் நற நறவென்று முறிந்தன. தெப்பம் ஒரு சுற்றுச் சுற்றிவிட்டுத் தப தபவென்று தண்ணீரில் மூழ்கிற்று.

பாறையிலே தெப்பம் மோதப் போன சமயத்தில், சிவகாமி 'ஆ' என்று சப்தமிட்டுக் கொண்டு, படகில் எழுந்து நிற்க முயன்றாள். அடுத்த கணத்தில் அவள் தூக்கித் தண்ணீரில் எறியப்பட்டாள்.

கண் முன்னால், ஆயிரம் மின்னலின் ஒளிபோல் பிரகாசமாயிருந்தது. அப்புறம் ஒரே இருள் மயமாயிற்று. காதில் 'ஙொய்' என்ற சப்தம் ஒலித்துக் கொண்டிருந்தது.

வெகுநேரமாகத் தோன்றிய உணர்ச்சியற்ற நிலைக்குப் பிற்பாடு, ஏதோ உணர்ச்சி உண்டாவது போல் இருந்தது. கால் விரல்களிலே மணல் தட்டுப்படுவது போல் தோன்றியது. பானைத் தெப்பத்தில் ஏறி வந்தது, தெப்பம் பாறையிலே மோதப் போனது முதலிய விவரங்கள், ஒரு கணத்தில் ஞாபகத்துக்கு வந்தன. உடனே, தான் தண்ணீருக்குள்ளே மூழ்கியிருப்பதும், மூச்சு விடுவதற்குக் கஷ்டப்படுவதும் உணர்வில் தோன்றியது.

''ஆகா! மாமல்லரும் மூழ்கியிருப்பாரல்லவா? இரண்டு பேரும் சேர்ந்துதானே வெள்ளத்திலே மூழ்கினோம்? ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு செத்துப் போகக்கூடாதா?'' என்ற எண்ணம் மின்னல் போல் உதித்தது. அதே கணத்தில், ஒரு கரம், அவளுடைய கரத்துடன் தட்டுப்பட்டது. மறுகணத்தில் அந்தக் கரம் அவளுடைய கையைப் பற்றியது. ஆகா! அது மாமல்லரின் உறுதியான கரம்தான்; சந்தேகமில்லை. நமது கடைசி மனோரதம் உண்மையிலேயே நிறைவேறப் போகிறதா? சண்டையும், சூழ்ச்சியும், வஞ்சகமும், கொடுமையும் நிறைந்த, இந்த உலகை விட்டு நீங்கிச் சொர்க்க லோகத்தில் புகும்போது, தானும் மாமல்லரும் கைகோத்துக் கொண்டு போகப் போகிறோமா?

இதென்ன! கால் நன்றாய் ஊன்றுகிறதே! இதோ கூழாங் கற்கள் காலில் தட்டுப்படுகின்றனவே! இதோ திடீரென்று வெளிச்சம்.

தண்ணீர் வரவரக் கீழிறங்கி, கழுத்து மட்டுக்கும் வந்து, மார்பு மட்டுக்கும் வந்து, பிறகு இடுப்பு மட்டுக்கும் வந்துவிட்டது. ஆனால் பிரவாகத்தின் வேகம் மட்டும்

குறையவில்லையாதலால் சிவகாமியை உருட்டித் தள்ளப் பார்த்தது. அதோடு, மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் தண்ணீர் கொட்டியபடியால் சிறிதுநேரம் மிக்க வேதனையாயிருந்தது. இவ்வளவு அவஸ்தைகளுக்கிடையில் தன் கரத்தை மாமல்லர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நிற்பதையும் தன்னைப் போலவே ஆயனர், குண்டோதரன், அத்தை எல்லோரும் வெள்ளத்தின் வேகத்தினால் தடுமாறிக் கொண்டிருப்பதையும் சிவகாமி கண்டாள். சுகர்வட்டமிட்டுக் கொண்டு 'கீச்' 'கீச்' என்று கத்துவதையும், ரதி எப்படியோ வெள்ளத்திலிருந்து பிழைத்து, கரை மீதிருந்த பாறையில் தலையை வைத்துக் கொண்டு, ஏற முடியாமல் கால்களை உதைத்துக் கொள்வதையும் பார்த்தாள்.

பாறைத் தெப்பம் மோதிய இடத்தில் வெள்ளத்தின் வேகத்தினால் பெரிய பள்ளம் ஏற்பட்டிருந்தது. ஆனால் அடுத்தாற்போல் சமீபத்திலேயே ஆழம் குறைந்து, தண்ணீர் மேட்டுப்பாங்கான இடத்தில் பரவிப் பரந்து சென்றது. இக் காரணத்தினால் எல்லாரும் தப்பிப் பிழைப்பது சாத்தியமாயிற்று.

எல்லாரும் தட்டுத் தடுமாறிக் கரை ஏறியானதும் ''ஐயோ! போச்சே!'' என்றான் குண்டோதரன். மற்றவர்கள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தார்கள். ''என்ன போய் விட்டது?'' என்று ஆயனர் கேட்டதும், ''அவல் மூட்டை போச்சே'' என்றான்.

சற்று நேரம் எல்லாரும் கொல்லென்று சிரித்தார்கள். பிறகு புருஷர்களும் ஸ்திரீகளும் துணிகளைப் பிழிந்து உலர்த்திக் கட்டிக் கொள்வதற்காக வெவ்வேறு திசை நோக்கிச் சென்றார்கள்.

குண்டோதரனும் குமாரச்சக்கரவர்த்தியும் ஒரு பக்கமாகப் போன போது, ''குண்டோதரா! அவல் மூட்டை போனதைப் பற்றி அழுகிறாயே, தெப்பம் போய் விட்டதே! அதற்கு என்ன செய்கிறது'' என்று மாமல்லர் கேட்டார்.

''பிரபு! நல்ல வேளையாய் இந்தப் பாறைப் பிரதேசத்தில் தெப்பம் மோதிக் கவிழ்ந்ததே என்று எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. இல்லாவிடில் கடலில் போய்த் தானே சேர வேண்டும்? சமுத்திரத்து அலைகளிலே இந்தப் பாறைத் தெப்பம் என்ன செய்யும்?'' என்றான் குண்டோதரன்.

''இருந்தாலும் தெப்பத்தையும் காப்பாற்றியிருக்கலாம், நீ மட்டும் இன்னும் கொஞ்சம் லாகவமாய்க் கழி போட்டிருந்தால்.''

''அப்படி அவசியம் வேணுமென்றால், அதோ கிராமம் தெரிகிறதே - அங்கே பானைகள் சம்பாதித்துத் தெப்பம் கட்டிக் கொள்ளலாம், பிரபு! ஆனால், இப்போது தெப்பம் எதற்கு? இந்த வெள்ளம் அடங்குகிற வரையில் இங்கேயே இருப்பதுதான் நல்லது.''

''அழகுதான் குண்டோதரா! என் சைனியத்தை எங்கேயோ விட்டுவிட்டு நான் இங்கே இருக்க வேண்டும் என்றா சொல்லுகிறாய்? இவர்களை ஒரு பத்திரமான இடத்தில் சேர்த்த உடனே நாம் இதே தெப்பத்தில் புறப்படலாமென்று எண்ணியிருந்தேன்....''

''புறப்பட்டு என்ன பிரயோஜனம், பிரபு! இந்தப் பெருவெள்ளத்தில் எங்கே போகிறது? என்ன செய்கிறது? சைனியம் தாங்கள் விட்ட இடத்திலேயே இருக்குமா? தென்பெண்ணைக் கரையெல்லாம் இப்போது வெள்ளக் காடாய் இருக்குமே!''

''அதனால்தான் அவசியம் நான் போக வேண்டும். பரஞ்சோதியும் மற்றவர்களும் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்?''

''என்ன நினைப்பார்கள்? தாங்கள் பத்திரமாய் இருக்க வேண்டுமே என்றுதான் நினைப்பார்கள். அவர்களைப் பற்றித் தங்களுக்குச் சிறிதும் கவலை வேண்டியது இல்லை. ஏரி உடைத்துக் கொண்ட செய்தி, அவர்களுக்கு நல்ல சமயத்தில் போய்ச் சேர்ந்திருக்கும்!''

துணிகள் உலர்ந்து கொண்டிருக்கையில் குண்டோதரன் தன்னுடைய வரலாற்றை மாமல்லருக்கு விவரமாகக் கூறினான். நாகநந்தி விஷயமாக, ஆதியில் சக்கரவர்த்திக்குச் சந்தேகம் ஏற்பட்டு, அதன் பேரில் ஆயனர் வீட்டுக்குச் சத்ருக்னர் தன்னைக் காவல் போட்டதில் தொடங்கி, முதல் நாள் இரவு நாகநந்தியைத் தொடர்ந்து, ஏரிக்கரைக்குப் போய், அவருடன் துவந்த யுத்தம் செய்தது வரையில் விவரித்தான். அப்போது ஒரு அதிகாரக் குரல் தன்னை எச்சரித்ததையும், அதன்படியே தான் திரும்பி வந்து, வயோதிக புத்தபிக்ஷுவை வெள்ளத்தில் தள்ளிவிட்டுத் தெப்பத்தைக் கைப்பற்றிக் கொண்டு வந்ததையும் விவரமாகக் கூறி முடித்தான்.

குண்டோதரன் கூறியதையெல்லாம் கேட்டு, மகேந்திர பல்லவரின் முன்யோச



ளையிலும், இராஜதந்திரத்திலும் மாமல்லருக்கு இருந்த மதிப்பு பன்மடங்கு அதிகமாயிற்று. குண்டோதரனுடைய சாமர்த்தியத்தைப் பற்றியும் அவர் மிக வியந்து பாராட்டினார்.

''ஆனால் நீ அந்த வயோதிக பிக்ஷுவைத் தெப்பத்திலிருந்து தள்ளியது மட்டும் எனக்குப் பிடிக்கவில்லை, குண்டோதரா! அந்தப் பாவத்தை ஏன் செய்தாய்?'' என்று கேட்டார்.

''அது பாவமில்லை பிரபு! பெரிய புண்ணியம்! அவன் புத்த பிக்ஷுவுமில்லை; ஒன்றுமில்லை. காஞ்சி நகரத் தெற்குக் கோட்டை வாசலில் காவலனாக இருந்தவன். இந்த நாகநந்தியின் வலையில் விழுந்து, தேசத் துரோகியாகி விட்டான். அவனை வெள்ளத்தில் தள்ளியது போதாது. அவன் தலையில் ஒரு கல்லையும் தூக்கிப் போட்டிருக்க வேண்டும்!'' என்றான் குண்டோதரன்.

''அப்படியானால், எல்லாவற்றுக்கும் மூலகாரணமான நாகநந்தியை ஏன் உயிரோடு விட்டாய்? அவரையும் கொன்று விடுவதற்கென்ன?'' என்று மாமல்லர் கேட்டார்.

''பிரபு! எப்படியும் அந்த நாகப்பாம்பைக்

கொன்று தீர்த்துவிடுவது என்றுதான் எண்ணியிருந்தேன். ஆனால் 'சண்டையை நிறுத்து!' என்று இருளில் கேட்ட அதிகாரக் குரலின் கட்டளையை மீற முடியவில்லை. ஆகையினால்தான் உடைப்பிலே தள்ளி விட்டு வந்தேன். யார் கண்டார்கள்? உடைப்பு வெள்ளத்தில் அந்த வேஷதாரி பிக்ஷு, மூழ்கி ஒழிந்து போயிருக்கலா மல்லவா?''

''கூடாது! குண்டோதரா! கூடாது! அப்பேர்ப்பட்ட பாதகனுக்கு அவ்வளவு சுலபமான மரணம் கூடாது. அந்தக் கள்ள பிக்ஷுவால் ஆயனரும் சிவகாமியும் எப்பேர்ப்பட்ட அபாயத்துக்கு உள்ளாகி விட்டார்கள்!.....''

''பிரபு! மன்னிக்க வேண்டும். நாகநந்தியைப் பற்றி இவர்களிடம் ஒன்றும் பிரஸ்தாபிக்காமல் இருப்பதே நலம். இவர்க



ளுக்கு விஷயம் ஒன்றும் விளங்காது. வீணில் மனத்துன்பம் அடைவார்கள்.''

மாமல்லர் அதை ஒப்புக் கொண்டார். பிறகு, ''ஏரிக்கரையில் உனக்குக் கட்டளை விட்ட குரல் யாருடையது என்று தெரியவில்லையா?'' என்று கேட்டார்.

''ஊகித்தேன் பிரபு! ஆனால் தங்களிடம் சொல்லத் தைரியம் இல்லை. மன்னிக்க வேண்டும்!'' என்றான் குண்டோதரன்.

எச்சரித்தவர் மகேந்திர சக்கரவர்த்தியாயிருக்குமோ என்ற எண்ணம் ஏற்கெனவே அவர் மனத்தில் தோன்றியிருந்தது. குண்டோதரனும் அப்படியே ஊகிக்கிறான் என்று இப்போது தெரிந்தது.

மாமல்லரின் உள்ளத்தில் மகிழ்ச்சி, வெட்கம், வேதனை ஆகிய உணர்ச்சிகள் ஏக காலத்தில் உதயமாயின. குண்டோதரனை எச்சரித்தது மகேந்திர சக்கரவர்த்தியாயிருக்கும் பட்சத்தில் சைனியத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. எல்லோரும் காப்பாற்றப்பட்டிருப்பார்கள். ஆனால், தம்மிடம் நம்பிக்கையில்லாமல்தானே அவர் தொடர்ந்து வந்திருக்க வேண்டும்? அதற்குத் தகுந்தாற்போல் இருக்கிறதல்லவா தம்முடைய காரியமும்? நதிக்கரையிலே சைனியத்தை நிறுத்திவிட்டுத் தனியாக வந்து வெள்ளத்திலேயும் சிக்கிக் கொண்டோமல்லவா? சக்கரவர்த்தியை மறுபடியும் சந்திக்கும் போது, அவர் முகத்தை எவ்விதம் ஏறிட்டுப் பார்ப்பது?

இதற்கு மாறாக, இன்னொருவிதச் சிந்தனையும் உண்டாயிற்று. எது எப்படி வேணுமானாலும் போகட்டும்! என்ன அபகீர்த்தி, அவமானம் ஏற்பட்டாலும் ஏற்படட்டும். இந்த ஒரு நாள் ஆனந்த வாழ்வுக்காக எதைத்தான் சகித்துக் கொள்ளக்கூடாது? இனி வருங்காலமெல்லாம் இந்த ஒரு தினத்தின் இன்பமயமான வாழக்கையை நினைத்து நினைத்துப் பார்த்து மகிழ்ச்சியடையலாம் அல்லவா?

''பிரபு! நடந்தது நடந்துவிட்டது. இனிமேல் நடப்பதைப் பற்றித்தானே யோசிக்க வேண்டும்?'' என்று குண்டோதரன் கூறி, மாமல்லரின் சிந்தனையைக் கலைத்தான்.

''வேறு என்ன யோசனை செய்ய இருக்கிறது? வெள்ளத்திலே வந்துமாட்டிக் கொண்டு விட்டோம், இங்கிருந்து போகும் வழியைத் தேட வேண்டும்......''

''பிரபு! இன்றிரவு தங்குவதைப் பற்றி முதலில் யோசிப்போம். திறந்தவெளியிலே தங்க முடியாதல்லவா? இரவு மழை பிடித்துக் கொண்டால் என்ன செய்கிறது?''

''எங்கே தங்கலாம் என்று நினைக்கிறாய்?''

''அதோ சற்றுத் தூரத்தில் ஒரு கிராமம் தெரிகிறது. அங்கே போய் நான் முதலில் விசாரித்துக் கொண்டு வருகிறேன்.''

''அப்படியே செய்'' என்றார் மாமல்லர்.

அப்போது ''மாமல்லா! மாமல்லா!'' என்ற சுகரிஷியின் குரல் கேட்டது. அந்தக் குரல் வந்த வழியே சென்ற மாமல்லர், பாறையருகில் மகிழ மரத்தடியில் சிவகாமி தனியாக உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவள் அருகில் தாமும் உட்கார்ந்தார்.

## முப்பத்தோராம் அத்தியாயம்

# மகிழ மரத்தடியில்

விரைந்து சென்ற வெள்ளத்தின் இரைச்சலைத் தவிர, வேறு சப்தம் எதுவும் சற்று நேரத்துக்கு அங்கு இல்லாமலிருந்தது.

மாமல்லர் கண்கொட்டாமல் சிவகாமியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். சிவகாமி சிறிது நேரம் தரையைப் பார்ப்பாள்; சிறிது நேரம் வெள்ளத்தையும் வானத்தையும் பார்ப்பாள். இடையிடையே மாமல்லரின் முகத்தாமரையிலும் அவளுடைய இரு விழிகளாகிய கரு வண்டுகள் ஒரு கணம் மொய்த்து விட்டு, விரைவாக அவ்விடமிருந்து அகன்று சென்றன.

புயலுக்கு முன்னால் ஏற்படும் அசாதாரண அமைதியைப் போன்ற இந்த மௌனத்தைக் கண்டு, சுகரிஷியும் கூட வாய் திறவாமல் சிவகாமியின் முகத்தையும் மாமல்லரின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். கடைசியில் பொறுமை இழந்தவராய், ''இந்த வாய் மூடி மௌனிகளுடன் நமக்கு என்ன சகவாசம்!'' என்று சொல்கிறதைப் போல், இறகுகளைச் சட சடவென்று அடித்துக் கொண்டு, அங்கிருந்து பறந்து சென்றார்.

கிளி அங்கிருந்து அகன்றதும் மாமல்லரும் மௌனத்தைக் கலைக்க விரும்பியவராய்,

''சிவகாமி! என்ன சிந்தனை செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார்.

சிவகாமி மாமல்லரின் முகத்தை ஏறிட்டு நோக்கி, ''சற்று முன்னால் தண்ணீரில் மூழ்கினேனே, அப்படியே திரும்பிக் கரை ஏறாமல் வெள்ளத்தோடு போயிருக்கக் கூடாதா - என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றாள்.

''அப்படியானால் நான் உன்னைத் தேடிக்கொண்டு வந்ததெல்லாம் பிசகு என்று ஏற்படுகிறது. ஆனால், இப்போது கூட ஒன்றும் மோசம் போய்விடவில்லையே? பெரு வெள்ளம், இங்கேயிருந்து வெகு சமீபத்தில் தானே ஓடுகிறது!'' என்றார் மாமல்லர்.

''உண்மைதான்! வெள்ளம் வெகு சமீபத்தில் ஓடுகிறது! ஆனால் தானாக வெள்ளத்தில் விழுந்து சாவதற்கு மனம் வருகிறதா? அதுவும் நீங்கள் அருகில் இருக்கையில்'' என்று சிவகாமி கூறிய போது, அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பிற்று.

''இது என்ன! ஏதாவது சந்தோஷமாகப் பேசலாம் என்று பார்த்தால், நீ இப்படி ஆரம்பித்துவிட்டாயே!'' என்றார் மாமல்லர்.

''பிரபு! இன்றைய தினத்தைப்போல் நான் என்றைக்கும் ஆனந்தமாயிருந்தது கிடையாது. அதனாலேதான் இன்றைக்கே என் வாழ்நாளும் முடிந்திருக்கக்கூடாதா என்று தோன்றுகிறது!''

''அழகாயிருக்கிறது. நீ ஆனந்தம் கொண்டாடுகிற விதம்'' என்றார் நரசிம்மவர்மர்.

''சென்ற ஒரு வருஷகாலமாக நான் அனுபவித்த துன்பத்தையும் வேதனையையும் அறிந்தால் இப்படித் தாங்கள் சொல்ல மாட்டீர்கள்!'' என்றாள் சிவகாமி.

''துன்பமா? உனக்கு என்ன துன்பம் நேர்ந்தது? ஏதாவது உடம்பு அசௌகரியமா? ஏன் எனக்குச் சொல்லி அனுப்பவில்லை?''

''உடம்புக்கு ஒன்றுமில்லை, பிரபு! உடம்பு மூன்று வேளையும் சாப்பிட்டுக் கொண்டு, ஆடை ஆபரணங்களை அணிந்து கொண்டு, சௌக்கியமாய்த்தானிருந்தது; எல்லாத் துன்பத்தையும் வேதனையையும் உள்ளந்தான் அனுபவித்தது!''

''ஆஹா! துன்பமும் வேதனையும் உனக்கேன் வரவேண்டும்? யாராவது உன்னை உபத்திரவப்படுத்தினார்களா என்ன? உன் தந்தை ஆயனர் அதைத் தடுக்காமல் என்ன செய்து கொண்டிருந்தார்?''

சிவகாமி எதைக் குறிப்பிட்டு இவ்விதமெல்லாம் பேசுகிறாள் என்பது, பல்லவ குமாரருக்குத் தெரிந்துதான் இருந்தது. எனினும், அவள் வாயினால் சொல்லிக் கேட்பதற்காகவே அவ்விதம் புரிந்து கொள்ளாதவர் போலப் பேசி வந்தார்.

அதற்குச்சிவகாமி, ''ஒருவராலும் எனக்கு ஒரு உபத்திரவமும் ஏற்படவில்லை. காட்டிலே வளர்ந்த பேதைப் பெண்ணாகிய எனக்குப் பேசத் தெரியவில்லை. பிரபு! என் மன வேதனைக்கெல்லாம் காரணம், தங்களை மறக்க முடியாமைதான்'' என்று கூறிக் கண்களிலிருந்து கலகலவென்று கண்ணீர் வடித்தாள்.

மாமல்லர் ஆர்வம் பொங்கிய கண்களினாலே அவளைப் பார்த்து, ''இவ்வளவு தானே, சிவகாமி! அதற்காக இப்போது ஏன் கண்ணீர் விடவேண்டும்? நானுந்தான் உன்னுடைய நினைவினால் எவ்வளவோ வேதனைகளை அனுபவித்தேன்! என்னுடைய ஓலைகளையெல்லாம் நீ படிக்கவில்லையா?''

''தாங்கள் எழுதியிருந்த ஒவ்வொரு எழுத்தையும் மனப் பாடம் செய்திருக்கிறேன். ஒவ்வொரு ஓலையையும் நூறு தடவை ரதிக்குப் படித்துக் காட்டியிருக்கிறேன். ஓலையைப் படிக்கும் போது சந்தோஷமாயிருக்கும். அப்புறம் அவ்வளவுக் கவ்வளவு வேதனை அதிகமாகும்; தங்கள் பேரில் கோபம் கோபமாய் வரும்....''

''சிவகாமி! உனக்கு என்பேரில் கோபித்துக் கொள்ளும் சௌகரியமாவது இருந்தது. எனக்கு அதுகூட இல்லையல்லவா? யாருடைய துன்பம் அதிகம் என்று சொல்!''

''என்பேரில் தாங்கள் கோபித்துக் கொள்ளவில்லையா? அப்படியானால், அசோகபுரத்துப் புத்த விஹாரத்தின் வாசலிலே என்னைப் பார்த்துவிட்டு, ஒரு கண நேரங்கூடத் தாமதிக்காமல் போனீர்களே, ஏன்? என்பேரில் இருந்த அன்பினாலேயா?''

''ஆம், சிவகாமி! நான் வரும் வரையில் அரண்ய வீட்டிலேயே இருக்கும்படி சொல்லியிருந்தும் நீங்கள் கிளம்பி வந்துவிட்டீர்களே என்று எனக்குச் சிறிது கோபமாய்த்தானிருந்தது. ஆனால் அன்றிரவே புயலையும் மழையையும் பொருட்படுத்தாமல் நான் வரவில்லையா? எவ்வளவு முக்கியமான காரியங்களை விட்டு விட்டு வந்தேன்? இப்போதுகூட அங்கே என்ன நடந்திருக்கிறதோ என்னவோ? அதையெல்லாம் மறந்துவிட்டு, உன்னுடைய பொன்

முகத்திலே ஒரு புன்சிரிப்புக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். நீயோ கண்ணீர் விட்டு என்னைக் கலங்க அடிக்கிறாய்!'' என்றார் மாமல்லர்.

''எல்லாம் உங்களால் ஏற்பட்ட மாறுதல்தான். இரண்டு மூன்று வருஷத்துக்கு முன்னாலே ஓயாமல் சிரிப்பும் சந்தோஷமுமாய்த் தானிருந்தேன். காட்டில் யதேச்சையாய்த் திரியும் மானைப் போல் துள்ளி விளையாடிக்கொண்டிருந்தேன். என் தந்தை கூட என்னை அடிக்கடி 'இப்படிச் சிரிக்காதே, சிவகாமி. பாஞ்சாலி சிரித்துத் தான் பாரதப்போர் வந்தது. பெண்கள் அதிகமாய்ச் சிரிக்கக் கூடாது' என்று எச்சரிப்பதுண்டு. அந்தச் சிரிப்பும் குதூகலமும் இப்போது எங்கோ போய்விட்டது! நினைத்தால் எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது...''

''சிவகாமி! நீ சிரிப்பும் சந்தோஷமுமாய் இருந்த காலத்தைப் பற்றிப் பேசு! உன் குழந்தைப் பிராயத்தைப் பற்றிச் சொல்லு. அந்த நாட்களைப் பற்றிக் கேட்க வேணுமென்று எனக்கு ஆவலாயிருக்கிறது!'' என்றார் நரசிம்மவர்மர். மேலும் அவர் வற்புறுத்திக் கேட்டதின் பேரில், சிவகாமி சொல்லத் தொடங்கினாள்:

''நான் சின்னஞ்சிறு பெண்ணாயிருந்த போது, என் தந்தையின் செல்வக் கண்மணியாய் வளர்ந்து வந்தேன். அரண்யம் சூழ்ந்த சிற்ப அரண்மனையிலே நான் ராணியாயிருந்து தனி அரசு செலுத்தினேன். என் தந்தையிடம் சிற்ப வேலை கற்றுக் கொண்ட சீடர்கள் என்னிடம் பயபக்தி கொண்ட பிரஜைகளாய் இருந்து வந்தார்கள். கண்ணிமையை அசைத்தால் போதும்! அவ்வளவு பேரும் விரைந்து ஓடிவந்து, 'என்ன பணி?' என்று கேட்பார்கள். அப்போதெல்லாம் எனக்குக் கவலை என்பதே தெரியாது; துன்பம் என்பதையே நான் அறிந்ததில்லை.

''உலகத்திலே எதைப் பார்த்தாலும் எனக்கு வியப்பும் மகிழ்ச்சியுமாயிருக்கும். காலையிலே எழுந்ததும் தகதகவென்று பிரகாசித்துக் கொண்டு உதயமாகும் தங்கச் சூரியனைக் கண்டு ஆனந்திப்பேன். மாமரங்களில் தளிர்த்திருக்கும் இளஞ் சிவப்பு நிறத் தளிர்களைக் கண்டு களிப்படைவேன். மரம் செடி கொடிகளில் புஷ்பிக்கும் வித விதமான வர்ண மலர்கள், எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை அளிப்பதுண்டு. செடி கொடிகளுக்கு மத்தியில் ஆடிக் கொண்டே பறக்கும் பட்டுப் பூச்சிகளை ஓடிப் பிடிக்க முயல்வேன். அவை என்

கையில் அகப்படாமல் தப்பித்துக் கொள்ளும்போது, கலீரென்று சிரிப்பேன். மது உண்ட வண்டுகளின் ரீங்காரத்தைக் கேட்கும் போதெல்லாம் எனக்கும் ஆனந்த போதை உண்டாகிவிடும். காட்டுப் பறவைகள் இசைக்கும் கீதத்தைக் கேட்டுப் பரவசமடைவேன்.

''இரவிலே அகண்ட வானத்திலே மின்னும் நட்சத்திரங்களெல்லாம் தங்களுடன் வந்து சேரும்படி என்னைக் கண் சிமிட்டி அழைப்பது போலத் தோன்றும். அவற்றின் அழைப்புக் கிணங்கி நானும் மனோரதத்தில் ஏறி உயர உயரப் பறந்து செல்வேன். சில சமயம் சந்திரனைப் பார்த்தால் எனக்கு அன்னப் பட்சியைப் போலிருக்கும். அதன்மேல் ஏறிக் கொண்டு, நட்சத்திரங்களுக்கிடையே வட்ட மிட்டுக் கொண்டிருப்பேன். சில சமயம் நிலாமதியானது ஒரு அழகிய சிறு தோணியைப்போல் எனக்குத் தோன்றும். அதன் மேல் ஏறிக் கொண்டு வானமாகிய நீலக்கடலில் மிதந்து வருவேன். வழியிலே தென்படும் நட்சத்திரச் சுடர் மணிகளையெல்லாம் கைநிறைய அள்ளி அள்ளி மடியிலே சேர்த்துக் கட்டிக் கொள்வேன்.

''இப்படிக் குதூகலமாகக் காலம் போய்க் கொண்டிருக்கையில் என் தந்தை எனக்கு நாட்டியக் கலை கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். அது முதல் எனக்கு நடனக்கலைப் பைத்தியம் பிடித்துவிட்டது. சதா சர்வகாலமும் நாட்டியமாடிய வண்ணமாகவே இருந்தேன். காட்டுக்குள் விளையாடப் போனால் ஆடிக்கொண்டே போவேன்; தாமரைக் குளத்தில் குளிக்கப் போகையில் என் கால்கள் ஜதி போட்டுக்கொண்டே போகும். அந்த நாளில் பூமியும் வானமும் ஒரு பெரிய நடன அரங்கமாக எனக்குக் காட்சி தந்தன.

''தடாகத்தில் வண்ணத் தாமரைகள், தென்றல் காற்றில் அசைந்தாடும் போது, அவை ஆனந்த நடனமாடுவதாகவே எனக்குத் தோன்றும். வான அரங்கத்தில் விண்மீன்கள் விதவிதமான ஜதி பேதங்களுடன் நடனம் புரிந்து கொண்டு திரும்பத் திரும்பச் சுழன்று வருவதாகத் தோன்றும்.

''இப்படி ஆனந்த வெள்ளத்தில் மிதந்த வண்ணமாக என் வாழ்க்கை நடந்து கொண்டிருந்த காலத்திலேதான், தாங்கள் ஒருநாள் தங்கள் தந்தையாருடன் எங்கள் அரண்ய வீட்டுக்கு வந்தீர்கள்....'' என்று கூறிச் சிவகாமி கதையை நிறுத்தினாள்.

(தொடரும்)

# தூங்குமூஞ்சி மரம்

வேறு வழியே இல்லை. அதனால்தான் அருண் இந்த முடிவுக்கு வர நேரிட்டது.

கையில் ஒரு சிறிய பாட்டில். கூரான இரும்பு ஆணி. ஒரு சிறிய சுத்தியல். இவை ஒரு பிரம்மாண்டமான உயிரைப் போக்கிட உதவும் சின்னஞ்சிறிய ஆயுதங்கள்.

'சரி... நினைச்சபடியே செய்து விட வேண்டியதுதானா?' அவன் மனது, மீண்டும் வேதாளமாய் மாறத் தொடங்கிய போது, கடைசி கடைசியாய் அவனது அருமை நண்பன் செந்தில் சொன்னதும் நினைவுக்கு வந்தது.

'உன்னையெல்லாம் என்ன சொன்னாலும் திருத்தவே முடியாதுடா அருண்...! ஏன்னா நீயெல்லாம் மனுஷ சாதியே இல்லடா... கழுத்திலே சுத்தியிருக்கிறது வைர மாலையாவே இருக்கட்டுமே... அதுவே உன் கழுத்தை நெரிக்க உயிரைப் பறிக்கப் போகுதுன்னா, படாருன்னு தூர அறுத்து எறிஞ்சுட வேண்டியதுதானே... இதுலே யோசிக்க என்ன இருக்கு? ஒண்ணுமில்லாத ஒரு சாதாரண விஷயத்துக்கே இப்படி அலட்டிக்கிட்டீன்னா இந்த உலகத்திலே இருந்து நீயெல்லாம் என்னதான் சாதிக்கப் போறியோ....!'

'நிஜம்தான். இதென்ன பெரிய விஷயம்? நாட்டிலே இப்ப என்னென்னமோ நடக்குது. அதையெல்லாம் பாக்கிறப்போ இது ரொம்பச் சாதாரண விஷயம்... இதுக்குக் கூட மனசொப்பலேன்னா செந்தில் சொல்ற மாதிரி நாம என்னதான் சாதிக்கப் போறோம்!'

சிறிது உள்தர்க்கத்திற்குப் பிறகு, அருணின் மனது, கொஞ்சம் கொஞ்சமாகக் கெட்டிப் படத் தொடங்கியது.

அப்போது இரவு இரண்டு மணிக்கு மேலிருக்கும். இரவுக் காட்சி முடிந்து ஜனங்களும் போய் விட்டார்கள். மனித நடமாட்டம் இனிமேல் அரிதுதான்.

'இதுதான் சரியான தருணம்... முடித்து விட வேண்டியதுதான்!' கையிலிருந்த பாட்டிலை மடியில் வைத்துக் கொண்டு, ஆணியையும் சுத்தியலையும் எடுத்துக் கொண்டு 'அதன்' அருகில் நெருங்கினான்.

புறநகர்ப் பகுதியொன்றில், சாலையை ஒட்டி அவன் கட்டியிருந்த புது வீட்டிற்கு வருகை தந்த அத்தனை பேரும் ஒட்டு மொத்தமாகச் சொன்னது இதுதான்.

''வீடு ரொம்ப அம்சமா இருக்கு அருண்... ஆனா அதுக்கு திருஷ்டிப் பரிகாரமா இருப்பது, வாசல்லே நிக்கிற இந்தத் தூங்குமூஞ்சி மரம்தான். முதல்லே இந்தச் சனியனை அப்புறப்படுத்துற வழியைப் பாரு... வாசல்லே தூங்குமூஞ்சி மரம் இருந்தா, அந்த வீடே விடியாதும்பாங்க....''

அவர்கள் சொன்னதற்கு மறுப்புச் சொல்லாவிட்டாலும் அவர்கள் நினைக்கும் அளவிற்கு அவனால் அந்த மரத்திடம் வெறுப்புக் காட்ட முடியவில்லை.

இந்த வீட்டைக் கட்டத் தொடங்கிய நாள் முதல், அவன் இந்த மரத்தின் காலடியில் அமர்ந்தபடிதான் வீட்டு வேலைகளை மேற்பார்வை செய்தான். மதியப்பொழுதில் உணவுக்குப் பின்னர் ஒரு பழைய ஜமுக்காளத்தை விரித்து, அந்த மரத்தடியில்தான் தலை வைத்துப் படுத்திருப்பான். அவன் மட்டுமல்ல; கட்டட வேலையில் ஈடுபட்டிருந்த அத்தனை பேரும் அந்த மரத்தின் அடியில் தனித்தனியாகவும் சேர்ந்து அமர்ந்தும் சிரித்துப் பேசியபடிதான் சாப்பிடுவார்கள். அப்புறம் உசிதம் போல் கால்களை நீட்டியும், மடக்கியும் ஓய்வெடுப்பார்கள். அப்போதெல்லாம் அந்தத் தூங்குமூஞ்சி மரம் ஒரு விசுவாசமுள்ள வேலைக்காரனைப் போல் அவர்கள் அத்தனை பேருக்கும் வெயில் பட்டுவிடாமல் இலைக்குடை பிடித்தபடி பொறுமையாய் நிற்கும்.

உத்தமசோழன்

''பார்க்கலாம்... இது என்ன நம்ப மரமா..? ஹைவேஸ் மரமாச்சே...!''

''இருந்தா என்ன... ஹைவேஸ் என்ஜினியர்கிட்ட போய் இந்தத் தூங்குமூஞ்சி மரம் எங்க வீட்டுக்கு இடைஞ்சலா இருக்கு, வெட்டிடணும்னா... பர்மிஷன் கொடுத்துட்டுப் போறாங்க....''

''செய்வோம்...!''

'அந்த மரம் உதவியா இருக்கிறவரைக்கும் பயன்படுத்திக்கிட்டு உபயோகம் தீர்ந்த பிறகு, அதை வெட்டிடணும்னா எப்படி? அது நன்றி கெட்டத்தனமில்லையா...?'

ஒரு நாள் அவன் மனைவி புலம்பித் தீர்த்து விட்டாள்.

''ஒவ்வொருத்தர் புது வீடு கட்டினதும்



வாசல்லே குரோட்டன்ஸ், ரோஜா, மல்லி கைன்னு அழகா ந ந் த வ ன ம் மாதிரி வச்சிருக்காங்க. ஆனா நம்ப வீட்லே ஒரு எழவும் செய்ய முடியலே.. இந்தப் பாழாய்ப் போன தூங்குமூஞ்சி மரம்தான் கையையும் காலையும் பரப்பிக்கிட்டு நிழல் காத்து நிக்குதே... அதுக்குக் கீழே எது துளிர்க்கும்? முதல்லே இத வெட்டி எறிய வழி பாருங்க...''

''என்ன நீ அது என்ன உங்க தாத்தா வீட்டு மரமா... நினைச்சவுடனே வெட்டியெறிய...? பார்ப்போம்...''

''அதானே...! உங்க மசமசத்தனம் உங்களை விட்டுப் போகாதே... என்ன பண்ணுவீங்களோ எனக்குத் தெரியாது. அந்த என்ஜினியரைப் பார்த்து, மரத்தை வெட்டறதுக்கு ஏ ற் பா டு பண்ணிட்டு மறு வேலை பாருங்க....''

'மரத்தை வெட்டுங்க... மரத்தை வெட்டுங்க' என்று மற்றவர்கள் சொல்வதைக் கேட்கும் போது, அவனுக்கு ஓர் ஆளையே வெட்டச் சொல்வது போல இருக்கும்.

மனைவியின் நச்சரிப்புத் தாளாமல், ஹைவேஸ் என்ஜினியரைப் போய்ப் பார்த்தான். அவர் நறுக்குத் தெரித்தது போல் பதில் சொன்னார்.

''மரம் நீங்க வீடு கட்டறதுக்கு முன்னாடியே அந்த இடத்திலே இருக்கு. நீங்க போயி மரத்துக்குப் பக்கத்திலே வீடு கட்டிக்கிட்டு மரம் இடைஞ்சல்னா எப்படிங்க..? அதோட உயிருள்ள மரத்தை வெட்றது சட்டப்படி குற்றம்... அவ்வளவுதான் என்னால் சொல்ல முடியும்...''

மறுபேச்சுப் பேசாமல் திரும்பி விட்டான் அருண். ஒருவகையில் அந்தப் பதிலால் அவனுக்கு நிம்மதிதான்.

ஒரு வாரத்திற்கு முன்பு, அவனது ஒன்று விட்ட மாமா ஒருவர் அருண் வீட்டிற்கு வந்திருந்தார். அவர் பழங்காலத்து ஆசாமி. கிராமத்துப் பேர்வழி.

வீட்டு வாசலுக்கு வந்ததுமே, தூங்கு மூஞ்சி மரத்தை அண்ணாந்து பார்த்தார். உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாக வழக்கமான சம்பிரதாயங்களைக் கூட மறந்து விட்டு, ''அந்த அருண் பயல் இருக்கானா?'' என்றுதான் கூப்பாடு போட்டார்.

''வாங்க மாமா... ஏன் இப்படி வந்ததும் வராததுமாக் கத்தறீங்க...?'' என்றான், பதற்றத்துடன் வெளியே வந்த அருண்.

''கத்தறேனா...? ஏண்டா கொஞ்சமாவது அறிவிருக்கா உனக்கு? இவ்வளவு கஷ்டப்பட்டுக் கட்டின வீட்டை, எண்ணி ஒரே வருஷத்திலே இடிச்சு நிரவிடுவே போலிருக்கே...?''

அருண் துடித்துப் போனான்.

''என்ன பேச்சு மாமா பேசுறீங்க...?''

''பின்ன என்னடா... இவ்வளவு காசைப் போட்டு வீட்டைக் கட்டிட்டு, வாசல்லே இவ்ளோ பெரிய தூங்குமூஞ்சி மரத்தை வளத்து வச்சிருந்தா என்னடா ஆகும்? அதோட வேரெல்லாம் எவ்ளோ தூரம் போகும்னு உனக்குத் தெரியுமா? வீட்டு அஸ்திவாரம் வரைக்கும் வந்து, நாளாக நாளாக மலைப் பாம்பு மாதிரி பெருத்து, அஸ்திவாரத்தையே நெருக்கிக் கட்டடமே விரிசல் கண்டு போயிடும்டா...''

அவர் அப்படிச் சொன்னதும் அவன் ஆடிப் போனான். வீட்டைக் கட்ட அவன் பட்ட கஷ்டம் அவனுக்கல்லவா தெரியும்!

''என்ன மாமா பண்றது... என்ஜினியர் முடியாதுன்னுட்டாரு...''

''அட மடப் பயலே.. இதுக்கு வேற வழி இருக்குடா... இப்பவே எங்கூட வீட்டுக்கு வா... நான் ஒரு தைலம் தர்றேன். அதை ஒருத்தருக்கும் தெரியாம மரத்துலே ஆணி அடிச்சு ஊத்திடு.. அவ்வளவுதான்... ரெண்டாம் பேருக்குத் தெரியாம மரம் பட்டுடும்...''

அவர் அப்படிச் சொல்லும்போதே, கண்ணெதிரே ஏதோ கொலை நடந்து கொண்டிருக்கிற மாதிரி பதறிப் போனான்.

இருந்தாலும் அந்தக் கொலையை, செய்தே ஆக வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிப் போனான்.

இதோ அதைச் செய்து முடிப்பதற்காகத்தான் மனம் கனத்து நின்று கொண்டிருக்கிறான். இதற்கிடையில் விதம் விதமான யோசனைகள்.

'டேய்... அருண், நான் உனக்கு எவ்வளவு உதவி செஞ்சிருக்கேன். நீயே இப்படிச் செய்யலாமா.. வெயில் காலத்தில் எவ்வளவு பேர் என் நிழலில் ஒதுங்குவார்கள். ஆடு மாடுகள் நிழலுக்கு இதமாய்ப் படுத்தபடி அசைபோடும். என்னைப் பட்டுப் போகச் செய்த பிறகு, அதற்கெல்லாம் பதிலுக்கு என்ன செய்வாய்...?' என்று மனத்துக்குள் அழுது புலம்புமோ!'

'சரி... சரி... இப்படியெல்லாம் நினைச்சுப் பார்த்தா நம்ம வீடில்லே இடிஞ்சுடும்... மனசைப் போட்டு அலட்டிக்காம மாமா சொன்ன வேலையைச் செய்' என்று உள்மனது அருணை அதட்டியது.

உடலெல்லாம் வியர்க்க, அவன் மரத்தின்

# எங்க ஊரு சிப்பாய்



ராணுவ உடையில் ஜம்மென்று ரயிலில் வந்து இறங்கி, ஊருக்குள் நடந்து செல்லும் போதே, அங்கங்கே கண்ணில் படும் தவறுகளையும் அக்கிரமங்களையும் தட்டிக் கேட்கும் போதும் -

வீட்டினுள் நுழைந்த நொடியிலேயே தந்தை மறைந்து போய் விட்டிருந்த செய்தி அறிந்து, அதிர்ச்சி அடையும் போதும் -

ஸ்ரீபானு தன்னை விரும்புகிறார் என்பது தெரிந்து, 'ஒரு பெருந்தனக்காரரின் மகளைக் காதலிக்க மாட்டேன்' என்று பிடிவாதமாக அவரை ம று த் து ஒதுக்கும் போதும் -

பின்னர், தன் மனத்தில் இடம் பிடிக்கும் அந்த ஏழைப் பெண் வேறு யாருமில்லை.... தன் காதலை எப்படியும் அடைந்தே தீருவது என்கிற முனைப்போடு மாறுவேடத்தில் வந்துள்ள ஸ்ரீபானுதான் என்பது தெரிந்துபோய் (கூந்தலை வித்தியாசப் படுத்திக் காண்பிக்க வேறு ரக டோப்பா அணிந்து, புடைவை கட்டும் முறையை மாற்றி விட்டால் அடையாளம் தெரியாமல் போய்விடுமா, என்ன?) அதிர்ச்சி அடையும் போதும் -

தந்தையின் மரணம் இயல்பானதல்ல... கிராமத்துப் பெருந்தனக்காரருடைய ஆணவப் போக்கின் விளைவுதான் அது என்பது தெரிந்து போய்ப் பொங்கியெழுந்து பழி வாங்க முனையும் போதும் -

நடிப்பில் அர்ஜுன் சோடை போகவில்லை.

போயிருப்பது கதைதான்.

அலுத் துப் போன ஃபார் முலா.

- சி. ஆர் . கே.

அடிப்பாகத்தை நெருங்கும் போது, தூரத்தே ஒரு லாரி ப ய ங் க ர சப்தத்துடன் வெளிச்சத்தை வாரியிறைத்தபடி பேய்த்தனமாக ஓடி வந்தது.

அது ஏதோ சாலைக்குத் தென்புறமாய் வேலிக்குள்ளே நின்று கொண்டிருந்த அருணையே குறி வைத்து ஓடி வருவது போல் தோன்றியது.

இவன் பயத்தால் உறைந்து போனான்.

ஓட்டுநரின் கட்டுப்பாட்டிலிருந்து மீறிப் போன அந்த லாரி, சாலையில் திசை மாறிக் கொல்லைக்குள் நின்று கொண்டிருந்த அருண் மீது ஏறி, அவனுக்குப் பின்புறமிருந்த அவனது வீட்டையும் மோதியிருக்க வேண்டியதுதான்; அது ஓடி வந்த விதம் அப்படித்தான்.

ஆனால் அப்படி ஓடி வந்த லாரி, குறுக்கே நின்ற அந்தச் 'சனியன்' பிடித்த தூங்குமூஞ்சி மரத்தில் மடாரென்று மோதிச் சரிந்து கவிழ்ந்தது.

# ஆகாசத் தாமரை

## 19

மஞ்சளாவுக்கு இரண்டு நாட்களாகக் கடுமையான காய்ச்சல். இன்று தேவலை. பல ஹீனமான நிலையிலிருந்தாள்.

துருவ் தன்னை வந்து பார்ப்பானென்று அவள் எதிர்பார்த்தாள். அவன் வரவில்லை. தன்னறையிலேயே முடங்கிக் கிடந்தான்.

இரசாயனத் தொழிற்சாலையில் வாங்கியிருந்த பங்குகளை அவள் விற்று விட்டாள். தர்னேஜாவுக்குக் கோபம். அவன் அவளிடம் தொடர்பு கொள்ள முயன்றான். உடல் நலம் சரியில்லை என்று கூறி, யாரையும் பார்ப்பதாக இல்லை என்று சொல்லி விட்டாள். ஆனால் பத்மநாபன் விடுதலையாகி இந்தியா வுக்குத் திரும்பியவர், அவளைப் பார்க்க விரும்புவதாகக் காலையில் ஃபோன் செய்த போது மட்டும் அவள் அதற்குச் சம்மதித்து விட்டாள்.

உத்தம்சிங் வந்து சொன்னான்: ''பத்மநாபன் வந்திருக்கிறார்.''

''அழைத்து வா... நல்ல காப்பியும் கொண்டு வா...'' என்றாள் மஞ்சளா.

பத்மநாபனுக்குத் திடீரென்று வயது கூடி விட்டாற்போல் தோன்றியது. அவர் மிகவும் சோர்வடைந்திருந்தார்.

''உடம்பு சரியில்லேன்னான் உத்தம்சிங். இப்போ எப்படி இருக்கு?'' என்றார் பத்மநாபன்.

மஞ்சளா எழுந்து உட்கார்ந்தாள்.

''பரவாயில்லே, படுத்துக்கோங்கோ...''

''இல்லே... ஐ ஃபீல் பெட்டர்... என்னாலே உங்களுக்குத்தான் தொல்லை...''

''இட் ஈஸ் ஆல் இன் தி கேம்... ஆனா, பாரிஸ்லே ஜெயில் ரொம்பச் சுகமா இருந்தது. தில்லி ராமகிருஷ்ணாபுரம் கவர்ன்மெண்ட் அபார்ட்மெண்டை விட ரொம்பச் சௌகர்யம். ஜோஸ்யம் சொல்ல ஆரம்பிச்சேன், அங்கே மத்த கைதிகளுக்கு... ஐ பிகேம் வெரி பாபுலர்...'' என்று சிரித்துக் கொண்டே சொன்னார் பத்மநாபன்.

''சன்னானாவும் மந்திரியும் இப்படிச் செய்வாங்கன்னு நான் எதிர்பார்க்கலே.''

''அப்படிச் சொல்லாதீங்கோ. வியாபாரத் துறையிலே இருந்துண்டு, அவா இப்படிச் செய்வான்னு நான் எதி..பார்க்கலேன்னு நீங்க சொன்னேன்னா யாராவது நம்புவாளா? நமக்குச் செய்ய மாட்டான்னு ஒரு நம்பிக்கை, அசட்டு நம்பிக்கைன்னு வேணுமானாலும் வெச்சுக்கலாம். ஒரு சூதாட்டம், அதிர்ஷ்டமிருந்தா ஜெயிக்கலாம்னு ஒரு ஆசை...''

இவர் சொல்வது, உண்மைதான். 'நம்மை ஏமாற்ற மாட்டார்கள்' என்ற ஒரு தைரியம். ஆனால் தன்னைக் காப்பாற்றிக் கொண்டாக வேண்டுமென்ற ஒரு சூழ்நிலை உருவானால், அரசியல்வாதி நியாயமாக நடந்து கொள்வானென்று எதிர்பார்க்க முடியுமா?

''நான் உங்களை ஒன்னு கேட்கலாம்னு வந்தேன். முடியாதுன்னு சொல்லக்கூடாது'' என்றார், பத்மநாபன்.

'சொல்லுங்கோ...''

''நான் டெல்லியை விட்டே போயிடலாம்னுருக்கேன்.''

''எங்கே?''

''ஆழ்வார் திருநகரி.''

''ஆழ்வார் திருநகரியா?''

''ஆமாம். மெட்ராஸ்லே ஒரு வீடு இருக்கு. டெல்லியிலும் இருக்கு. ரெண்டையும் வாடகைக்கு விட்டுட்டு, ஆழ்வார் திருநகரியிலே ஒரு சின்ன சௌகர்யமான வீடா வாங்கிண்டு 'செட்டில்' ஆயிடலாம்னு பார்க்கறேன். 'இம்போர்ட் எக்ஸ்போர்ட் ரூல்ஸ்' எல்லாத்தையும் மறந்துட்டு, ரெகுலேஷன்ஸ் எல்லாத்தையும் மறந்துட்டு, ஆழ்வார் பாசுரங்களைத் தினப்படி சேவிச்சுண்டு, போற வழிக்கு நல்லதைத் தேடணும்னு ரொம்ப நாளா ஆசை... தயவு செய்து என்னை விட்டுடுங்கோ... 'ஐ ஷல் ஃபீல் எடர்னலி க்ரேட்ஃபுல்...''

மஞ்சளா பேசாமலிருந்தாள்.

அவர் போய்விட்டால், அவளுக்கென்று நம்பிக்கைக்குப் பாத்திரமான ஆள் யாரும் இருக்கப் போவதில்லை. என்ன செய்வது? அவருடைய வேண்டுகோளை மறுக்கக் கூடிய நிலையிலும் அவள் அப்பொழுதில்லை.

இந்திரா பார்த்தசாரதி

''நான் இன்னொண்ணு சொல்லட்டுமா?'' என்றார் பத்மநாபன்.

''சொல்லுங்கோ...''

''நீங்க என்ன நினைக்கிறேள்னு எனக்குத் தெரியறது. என் மாதிரி நம்பிக்கைக்குப் பாத்திரமான ஆள் யார் இருக்கப் போறான்னு யோசிக்கிறேள், இல்லியா? நீங்க மாத்திரம் பிடிவாதமா துருவ்வைத் தயார் பண்ணியிருந்தேள்னா, இந்த வயசான காலத்திலே உங்களுக்கும் ஒரு தொந்தரவும் இருந்திருக்காது. துருவ், இவ்வளவு கெட்டிக்காரப் பையன், வீணையை வச்சுண்டு எதுக்காக இப்படி அழணும்? எனக்குச் சங்கீதத்திலே 'இன்ட்ரெஸ்ட்' இல்லேன்னு நினைச்சுக்காதீங்கோ. நிறைய இருக்கு. இண்டஸ்ட்ரியலிஸ்ட் குடும்பத்திலே நன்னா அற்புதமா கச்சேரி பண்றவாளுமிருக்கா. அவா சங்கீதத்தையும் வியாபாரத்தையும் ரொம்ப அழகாச் சம்பந்தப் படுத்திண்டு, பணமும் பண்றா. பாட றவா ங்கிற தினாலே, புகழோடுமிருக்கா... துருவ் மட்டும் ஏன் இப்படி இருக்கணும்?''

மஞ்சுளா பேசாமலிருந்தாள். பத்மநாபன் இப்படி மனம் விட்டுப் பேசுவாரென்று அவள் எதிர் பார்க்க வில் லை.

அவரைப் போல் அவளாலும் ஒய்வெடுத்துக் கொள்ள முடியுமா? பிறகு என்ன செய்வாள்? அவருக்கு 'ஏதோ ஒன்றில்' நம்பிக்கை இருக்கிறது. அவளுக்கு அதுவுமில்லை. சமயம் வேண்டாம். சந்தியாவைப் போல் சமூக சேவையில் இறங்கி விட முடியுமா? அப்பொழுதுதான் அவளுக்கு ஞாபகம் வந்தது, சந்தியாவிடமிருந்து எந்தத் தகவலுமில்லையென்று. போராட்டம் நடத்தப் போவதாகச் சொல்லிவிட்டுப் போனாள். பைத்தியக் காரப் பெண். போராட்டம் நடத்தி என்ன பிரயோஜனம்? கற்பாறை மீது மோதிக் கொள்வது போல்தான்.

அப்பொழுது வீணையின் நாதம் காற்றில் மிதந்து வந்தது. லதாங்கி ராகம்.

''துருவ் இருக்கானா?''

''இருக்கான்... வீணை வாசிக்கிறது கேக்கலியா?''

''ஒரு வசனம் சொல்லுவாளே, அந்த மாதிரி'' என்றார் பத்மநாபன்.

''என்ன வசனம்?''

''ரோம் பற்றி எரியும் போது...''

மஞ்சுளா இடை மறித்தாள். ''துருவ்வைப் பொறுத்த வரையிலும் இது பொருந்தாது. அவன் எந்தப் பொறுப்பையும் ஏத்துக்கலே, ஏத்துக்கவும் தயாராகவில்லே.''





''நம்ம கட்சி ஜெயிக்க நான் ஒரு வழி கண்டுபிடிச்சிட்டேன்!''

''அப்படியா, நீங்க தலைவர் பதவியிலேர்ந்து விலகப் போறீங்கன்னு நான் எதிர்பார்க்கவே இல்லை தலைவரே!''

--குடந்தை எல். ராம்பிரபு.

''அவன் ஆம்படையாளாலேயும் அவனை ஒரு ஒழுங்குக்குக் கொண்டு வர முடியலியா?''

''அவன் ஆம்படையா அவனோட ஆத்துக்குப் போயாச்சு.''

''என்ன சொல்றேள்?''

''அவளாலே இவனோட குடித்தனம் பண்ண முடியலே. அவன் அவளைக் கவனிக்கறதே கிடையாது. நல்ல பொண்ணு, பாவம்... அவ, அவளோட ஆத்துக்குப் போறதே நல்லதுன்னு எனக்குத் தோணித்து.''

''கல்யாணங்கிறது இப்போ எல்லாருக்கும் ஒரு கிள்ளுக் கீரையாயிருக்கு.... ஒரு விரல் சொடுக்கிலே கல்யாணம், இன்னொரு விரல் சொடுக்கிலே 'டிவோர்ஸ்'!....''

'''டிவோர்ஸ்' ஆகலே.''

''ஆத்துக்குப் போயிட்டாங்கிறதுக்கும் 'டிவோர்ஸ்'ங்கிறதுக்கும் என்ன வித்தியாசம்? துருவ் என்னதான் வேணுங்கிறான்?''

''அதுதான் அவனுக்கே தெரியலே.''

''அவன் இப்போ பொறுப்பை ஏத்துண்டான்னா, உங்களுக்கு எவ்வளவு சௌகர்யமா இருக்கும்? நான் போய் வேணும்னா பேசட்டுமா அவன்கிட்டே?''

''நீங்களா?''

அவன் இவரை மதித்துப் பேசுவானா என்று அவள் யோசித்தாள். தூக்கி எறிந்து பேசுவது அவன் சுபாவம். இல்லை என்றாலும் அவன் மௌனத்தை இவரால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?

''நான் போய்ப் பேசறேன்...'' என்றார் பத்மநாபன்.

''எல்லாரும் முயற்சி பண்ணியாச்சு. அவனுக்கு ஈடுபாடில்லேன்னா நாம என்ன செய்ய முடியும்?''

''நான் போய்ப் பேசிப் பார்க்கிறேன்'' என்று எழுந்தார் பத்மநாபன்.

பத்மநாபன் துருவ் அறைக் கதவை லேசாகத் தட்டினார்.

லதாங்கி ராக ஆலாபனையில் உச்ச ஸ்தாயியைத் தொட்டு நின்ற இசை, திடீரென்று அறுபட்டது.

சிறிது நேரம் மௌனம். பிறகு கதவு திறந்தது. துருவ் பத்மநாபனை ஆச்சர்யத்துடன் நோக்கினான்.

''ஐ ஆம் ஸாரி, துருவ்.. ஒரு முக்கிய விஷயம் பேசலாம்னு வந்தேன்.''

அவன் மௌனமாக உள்ளே சென்றான். அவர் தொடர்ந்தார்.

அவர் நாற்காலியில் உட்கார்ந்தார்.

கட்டிலில் உட்கார்ந்த துருவ் கேட்டான், ''என்ன விஷயம்?''

''உங்கம்மாவுக்கு உடம்பு சரியில்லே...'' அவர் இதைச் சொல்லி விட்டு நிறுத்தினார். அவன் பேசாமலிருந்தான்.

''உங்கம்மாவுக்கு உடம்பு சரியில்லேன்னா, இது உன்னை பாதிக்கவேயில்லையா?''

''என்ன பண்ணணுங்கறீங்க?''

''ஒண்ணும் பண்ண வேணாம். அவரோட பொறுப்பை நீ ஏன் பகிர்ந்து கொள்ளக் கூடாது? அவருக்கிருக்கிற 'ப்ராப்ளம்ஸ்' பத்தி உனக்குத் தெரியுமா? என்னை 'பாரிஸ்'லே 'அரெஸ்ட்' பண்ணிட்டா, ரெண்டு அயோக்கியங்க உங்கம்மாவை 'வெட் டௌன்' பண்ணிட்டா. அப்புறம் ஏதேதோ பண்ணி நான் வெளியே வந்தேன். உங்கப்பா ஆரம்பிச்ச பிஸினஸ்... உங்கம்மா எதுக்காக அதைத் தொடர்ந்து நடத்தணும், அவர் பேரிலேருக்கிற மதிப்பு, மரியாதைக்காக. அவரோட கடைசிக் காலத்திலே கொடுத்த வாக்குறுதிக்காக... இது உனக்குப் புரியறதா? உங்கம்மாவுக்கு மட்டுந்தானா இந்தப் பொறுப்பு? அவரோட பிள்ளேங்கிற முறையிலே உனக்குப் பொறுப்புக் கிடையாதா?''

துருவ் கட்டிலிலிருந்து வீணை நரம்புகளைத் தன்னிச்சையாக மீட்டினான்.

''நான் ஒரு சராசரி ஆளு... எனக்குக் கலைகளைப் பத்தியோ, கலாசாரத்தைப் பத்தியோ ஒண்ணும் தெரியாது. ஆனா, பொறுப்பு ஏத்துண்டா அதை ஒழுங்கா நிறைவேத்தணுங்கிறது மட்டும் தெரியும். பொறுப்பு ஏத்துக்காமே இருக்க முடியாது. எப்போ மனுஷனாப் பொறந்துட்டமோ,

ஏதாவது பொறுப்பை ஏத்துண்டுதான் ஆக ணும். முதல்லே வயத்துக்குச் சோறு போடற பொறுப்பு, அப்புறம் கல்யாணம் பண்ணிண்டா, பொண்டாட்டி பிள்ளைக ளுக்குச் செய்ய வேண்டிய பொறுப்பு... நீ கல்யாணம் பண்ணிண்டுட்டு, ஆம்படை யாளை ஆத்துக்கு அனுப்பிச்சிட்டியாமே, இதென்ன நியாயம்? யோசிச்சுப்பாரு... அவ கதி என்ன ஆறது? 'லோயர் மிடில் கிளாஸ் குடும்பம்; பொண்ணு ஆத்துக்கு வந்துட் டான்னா, அப்புறம் அவளுக்கு நரக வேத னைதான். ஆத்திலே ஏச்சு, வெளியிலே ஏச்சு.. இந்த மாதிரி ஒரு நிலைக்கு அவளை உள்ளாக்கறதுக்கு உனக்கென்ன உரிமை இருக்கு? படிச்ச பொண்ணா, ஒரு விரல் சொடுக்கிலே, 'போ போ'ன்னு சொல்லிட்டு இன்னொரு ஆளைக் கல்யாணம் பண்ணிக்க. ஐ ஆம் ஸாரி, துருவ்.. நீ இப்படி இருக்கிறது நன்னாவேயில்லே...''

அவர் உணர்ச்சிவயப் பட்ட நிலையில் சொல்ல நினைத்தவற்றையெல்லாம், மிக வும் ஆணித்தரமாகச் சொன்னார்.

''நான் என்ன செய்யணுங்கிறீங்க?'' என் றான் துருவ் சில விநாடிகள் கழித்து.

''நான் ஒண்ணும் சொல்ல விரும்பலே. உனக்கு எது சரின்னு படறதோ அதைச் செய்... எனக்குப்பட்ட நியாயத்தைச் சொன் னேன், அவ்வளவுதான்.''

''எனக்கு எது சரி, எது தப்புன்னே புரிய மாட்டேங்கிறது. ஒவ்வொரு சமயத்திலே எல்லாம் சரியாயிருக்கு. இன்னொரு சமயத் திலே எல்லாம் தப்பாயிருக்கு.''

''ரொம்பப் படிச்சதினாலே வந்த கோளாறு... படிப்பை வச்சுண்டு, எல்லாத் தையும் சரின்னும் சொல்லலாம், எல்லாத்தையும் தப்புன்னும் சொல்ல லாம்.''

''நீங்க பேசின மாதிரி யாரும் என்கிட்டே பேசினதே கிடையாது. ஒவ்வொருவரும் சொல்ல வேண்டியதை நேரடியாச் சொல் லாமெ, வார்த்தைங்கிற முகமூடியிலே மறைச்சுத்தான் பேசிண்டு வந்திருக்கா... கார ணம், அவங்க எல்லாருமே என்னாலே ஏதாவதொரு வகையிலே பாதிக்கப்பட்ட வங்களா இருக்கலாம்...''

அவன் எழுந்து கைகளைக் கட்டிக் கொண்டு தனக்குத்தானே பேசிக் கொள்வது போல், மெதுவாக நடந்து கொண்டே பேசி னான். ''நானேதான் என்னுடைய 'ட்ரா ஜெடி...' என்ன செய்யறது சொல்லுங்க....''

பத்மநாபன் அவனையே பார்த்துக்கொண் டிருந்தார். தான் இவ்வாறு இருப்பதற்கு அவன் உண்மையிலேயே வருந்துவது போல் அவருக்குத் தோன்றியது. இவ்வளவு கெட்டிக் காரனாக இவனைப் படைத்து விட்ட இறைவன், எதற்குத் திருஷ்டிப் பரிகா ரம் போல், இப்படியொரு மன இயல்பை இவனுக்குத் தந்திருக்கிறார்?

அப்பொழுது உத்தம்சிங் அங்கு வேகமாக வந்தான்.

''மெம் ஸாஹேப் உங்களைக் கூப்பிடு கிறார்'' என்றான் துருவ்விடம்.

துருவ்வும் பத்மநாபனும் கீழே இறங்கிச் சென்றனர்.

மஞ்சுளா துருவ்வை அருகில் அழைத்து, அவன் கைகளைப் பற்றிக் கொண்டாள்.

''என்னம்மா?'' என்றான் துருவ்.

மஞ்சுளா பேசாமலிருந்தாள்.

''டாக்டரைக் கூப்பிடட்டுமா?'' என்றார் பத்மநாபன்.

'வேண்டாம்' என்பதற்கு அறிகுறியாக அவள் தலையை அசைத்தாள்.

துருவ் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''அந்தப் பெண் தற்கொலை செய்து கொண்டு விட்டாளாம். இப்பொழுதுதான் ஃபோன் வந்தது'' என்றாள் மஞ்சுளா.

''எந்தப் பெண்?'' என்று கேட்டார் பத்மநாபன்.

''கோமளா...'' என்றாள் மஞ்சுளா.

துருவ் தன் கைகளை விடுவித்துக் கொண்டு, அறையை விட்டு வெளியே சென்றான்.

(தொடரும்)

---

எதிர் வீட்டுச் சிறுவன்: நீங்க இருக்கீங்களான்னு எங்க அம்மா பார்த் திட்டு வரச் சொன்னாங்க.

இவர்: என்னடா விஷயம்?

சிறுவன்: நீங்க இல்லாத சமயம், உங்க வீட்டு மாமி என்னமோ விற்கிறதாச் சொன்னாங்களாம்! அதுதான்!

--சீர்காழி வி. ரேவதி.



# ஒப்பந்தம்

ராஜ் கோகுல்

கமலினி அழுது விடுவாள் போலிருந்தது. அவள் வீசிய வார்த்தைகள், என்னவோ தீப்பொறிகள் போல வந்து, வீழ்ந்து, அழகேசனின் மனத்தை நோகடிக்கச் செய்தன. கோபப்பட்டு விடக்கூடாது என்பதில் கவனமாக, மௌனமாக மனைவியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''எப்பப் பாரு என்னை ஏதாவது குறை சொல்றதே உங்களுக்கு வேலையாப் போச்சு. கல்யாணம் ஆகி இரண்டு வருஷம் கூட ஆகலே. அதுக்குள்ளே இப்படி மாறிட்டீங்க... கல்யாணம் ஆன புதுசிலே சிரிக்கச் சிரிக்கப் பேசுவீங்க. நான் எது செய்தாலும் வாயாரப் புகழ்வீங்க. பாராட்டு மழையாப் பொழிவீங்க. அப்போதெல்லாம் என் குறை ஒண்ணு கூட உங்க கண்ணுக்குப் படலை. இப்போ என்னடான்னா நான் எடுத்தால் குற்றம், வைத்தால் குற்றம், நின்றால் குற்றம், தொட்டால் குற்றம்... சே! சே!... அதுக்குள்ளே என்னை உங்களுக்குப் பிடிக்காமல் போச்சு... உங்க வெறுப்பைக் காட்ட ஏதாவது குறை சொல்லிக்கிட்டே இருக்கீங்க....'' மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனாள் கமலினி.

''ஏன் கமலி இப்படித் தப்பாப் புரிஞ்சுக்கிட்டு நீ பாட்டுக்குப் பேசிட்டே போறே?... இப்பவும் கூட நீ நல்லாச் செய்யற காரியங்களை நான் பாராட்டிக்கிட்டே தானே இருக்கேன்?...'' சமாதான முயற்சியில் இறங்கினான்.

''ஆமாமா!.... அதெல்லாம் சும்மா ஒப்புக்கு ரெண்டு வார்த்தை சொல்லிட்டுப் போயிடுவீங்க. குறையைத் தானே பெரிசா வரிஞ்சு கட்டிக்கிட்டு நீட்டி முழக்குறீங்க...'' மீண்டும் வெடித்து உஷ்ண அம்புகளாய் வார்த்தையை எய்தாள்.

''கமலி நான் சொல்றதைக் கேளும்மா. நான் நல்ல நோக்கத்திலே தான் நீ செய்கிற சின்னத்தப்புகளைச் சுட்டிக் காட்டுறேன். நீயும் அதே நோக்கத்திலே புரிஞ்சுக்கிட்டா பிரச்னையே வராது. அதே போல, நான் தப்புச் செய்தாலும் நீ தவறாம சுட்டிக் காட்டணும். அதைத்தான் நான் விரும்பறேன்... சரி, சரி. வேற ஒரு சட்டையை எடுத்துக்கிட்டு வா. ஆபீசுக்கு லேட்டாகுது...''

இவர்களது சண்டை சப்தத்தைக் கேட்டோ என்னவோ, தொட்டிலில் கிடந்த குழந்தை வித்யா, வீரிட்டு அழ ஆரம்பித்தாள்.

''சரி சரி, நீ குழந்தையைக் கவனி. நான் எடுத்துக் கொள்கிறேன்,'' என்று சொன்னவன் சாவியைத் தேடியெடுத்து பீரோவைத் திறக்கப் போனான்.

அதிகாலை எழுந்து, குழந்தையின் பசியாற்றி, மீண்டும் தூங்கச் செய்து விட்டு, குளித்து, துவைத்து, வீடுபெருக்கி அவசர அவசரமாகக் காலை டிபனை ஏழரை மணிக்கே தயாராக்கி, சாப்பாட்டு மேசையில் ஏற்றி விட்டு, அதே அவசரத்தோடு துவைத்துக் காய வைத்திருந்த கணவனின் சட்டையை அயர்ன் செய்யப் போனாள் கமலினி. அங்கே தான் பிரச்னை ஆரம்பித்தது.

''எட்டு மணி பஸ்ஸைப் பிடிக்க மாட்டேன்னுதான் நினைக்கிறேன்...'' என்று முணு முணுத்துக் கொண்டே, மனைவி தேய்த்துக் கொடுத்த சட்டையை அவசர கதியில் மாட்டிக் கொண்டவன், அதே விநாடியில் மூக்கின் மேல் கோபப்பட்டான். சட்டையில் நடு பட்டன் இல்லை!

''அம்மா தாயே, அழகா அயர்ன் பண்ணியிருக்கே, பாராட்டுறேன்! ஒரு பட்டன் அறுந்து போயிருக்கே. பார்த்துத் தைச்சிருக்கக் கூடாதா?''

பதிலுக்கு அவளும் கோபப்பட்டாள்.

''நான் ஒருத்தி கிடந்துக்கிட்டு மெஷின் கணக்காத் துடிக்கிறேன். அது புரியலையே உங்களுக்கு?...'' என்று ஆரம்பித்தவள், வார்த்தைகளைக் கொட்ட ஆரம்பித்தாள்.

பீரோவில் இருந்து அயர்ன் செய்யாத ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு

அவன் ஆபீஸ் புறப்பட்டான்.

கொஞ்ச நாளாகவே இந்தப் பிரச்னை தொடர்ந்துகொண்டுதான் இருந்தது - அவன் இவளைக் குறை சொல்வதும், இவள் படபடத்துப் பேசுவதும், அவன் உடனே கோபப்படுவதும், இவள் அழுவதும்!

தொட்டிலில் அழுத குழந்தையைத் தூக்கிப்பால்புகட்ட ஆரம்பித்தவளின்கண்க ளும் சுரக்க ஆரம்பித்தன.

மாலையில் அழகேசன் வீடு திரும்பிய போது, அவன் எதிர்பார்க்காத விதத்தில் கமலினியின் முகம் அழுது அழுது வீங்கிக் களைத்திருந்தது.

அதிர்ந்து போய், ''என்ன கமலி அழுதியா?'' என்றான். அவள் பதில் சொல் லாமல் உள்ளே போய் விட்டாள்.

இவனும் உள்ளே போய்க் கட்டிலில், பக்கத்தில் உட்கார்ந்தான். ஆதரவாக அவள் கையைப் பற்றிக் கொண்டு, ''என்னம்மா இப்படி?...'' என்றான்.

அவள் பேசவில்லை. மீண்டும் அழுவாள் போலிருந்தது.

''சரி. இனிமேல் நான் கோபமா எதுவும் பேச மாட்டேன். சரிதானே?''

''நீங்க ஒண்ணும் பேச வேண்டாம். ரொம்பத்தான் மாறிட்டீங்க நீங்க. கல்யா ணம் நடந்த புதுசிலே ஒண்ணு சொன் னீங்களே, நினைவிருக்கா? எப்பவும் நல்லதை மட்டுமே பார்க்கக் கத்துக்க ணும்னு!''

''புரியுது கமலி. இப்பவும் நான் உன்னி டத்தில் நல்லவற்றைப் பார்க்கவும், பாராட்டவும்தவறுவதில்லையே? அதேசம



யத்தில் தவறுகளைச் சுட்டிக் காட்டறதும், திருத்திக்கறதும் தப்பில்லையே கமலி. பாராட்டு மட்டுமே என்றால், கணவன் மனைவிக்கிடையே அது ஒரு விதமான அந்நியத் தன்மையை ஏற்படுத்தி விடும். இடித்துரைக்கும் அமைச்சர் இல்லாத மன்னன் கெடுவான்னு திருவள்ளுவரே சொல்லியிருக்கார் தெரியாதா?''

''போதும். நிறுத்துங்க, உங்க லெக்சரை. சாமர்த்தியமாப் பேச உங்களுக்குக் கத்துக் கொடுக்கணுமா என்ன?...'' கமலி முகத்தை



# அருள்வாக்கு

'டைவர்ஷ'னுக்கு இடமேயில்லாமல், பரிபூர்ண ப்ரம்மசர்ய அநுஷ்டானத்துக்கு எதிரான சபலங்கள் கொஞ்சமும் இல்லாமல், படிப்பே குறி என்று ஒருமுகப் படுத்தித்தான் பண்டைய குருகுலங்கள் வனங்களிலேயே நடந்தன. (அப்போது நாடு நகரம் குறைச்சல், காடுதான் அதிகம் என்பதையும் சொல்ல வேண்டும்) கட்டடத்துக்குள்ளே கட்டிப் போட்டிருக்காமல், இப்படி இயற்கையோடு இயற்கையாகப் பச்சை மரங்களும் ஆற்றுப் பிரவாஹமும் சூழ்ந்த இடங்களில், மான்களோடு விளையாடிக் கொண்டு, மாடு மேய்த்துக் கொண்டு அந்தப் பசங்கள் வாழ்ந்ததும், பரந்த ஆகாசமே கூரையாக உட்கார்ந்து கொண்டு, காயத்ரி அநுஸந்தானம் பண்ணினதுமே, அவர்களை இப்போது போல் செயற்கையான, 'மெகானிக'லான போக்குகளில் போக விடாமல், நல்ல ஜீவ சக்தியுடன் ஒவ்வொரு நிமிஷத்தையும் நிஜமாக வாழ்ந்து ஸந்தோஷிக்கும்படி செய்தது. இதை ரொம்பவும் ச்லாகித்தே டாகூர் ஒரே தோப்பும் துரவுமான இடத்தில் 'ஃபாரஸ்ட் யூனிவர்ஸிடி' என்பதாகத் தம்முடைய விச்வ பாரதி ஸர்வகலா சாலையை அமைத்தார். 'யூனிவர்ஸிடி' என்று சொல்லத் தக்க விதத்தில் ஒரே பெரிய வித்யாசாலை அதிகம் ஏற்படாத ஆதிகாலத்தில்கூட பல ரிஷிகள் பர்ணசாலைகள் அமைத்துக் கொண்டிருந்த வனப் பிரதேசங்களில் ஒவ்வொரு பர்ணசாலையும் ஒரு குருகுலமாக இருந்ததால் இயற்கை அழகு நிறைந்த விஸ்தாரமான பகுதிகள், அப்படியே ஒட்டு மொத்தமாக வித்யா பூமியாக விளங்கின.

தற்போது டவுன் லைஃப் இருக்கும் சீர்கேடான ஸ்திதியில், எவ்வளவுக்கெவ்வளவு ஊருக்கு வெளியே இருக்க முடியுமோ, அப்படி, கூடிய மட்டும் இயற்கையான சூழ்நிலை பாதிக்கப் படாத விதத்தில், பெரிய கட்டுமானம், நாகரிக உடுப்பு ஆகியன இல்லாமல், நம் ஸ்வதேசிய சாஸ்த்ரங்களுக்கும், கலைகளுக்கும் வித்யாசாலைகள் ஒரு சில வேனும் அமைக்க வேண்டும்.

-- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

'உர்' என்று வைத்துக் கொண்டாள்.

சில விநாடிகள் மௌனத்திற்குப் பின் அழகேசன் சொன்னான்.

''சரி கமலி. நீ இவ்வளவு தூரம் பிடிவாதம் பிடிக்கிறதாலே இந்த நிமிஷத்திலே இருந்து நமக்குள்ளே ஒரு ஒப்பந்தம். நான் இனிமேல் உன்னைக் குறை சொல்லவே மாட்டேன். பாராட்டுவதோடு நிறுத்திக் கொள்வேன். நீயும் அப்படியே செய்ய வேண்டும். சரி தானே?....''

அவள் தலையசைத்தாள். லேசாகப் புன்னகை செய்தாள்.

ஒப்பந்தம் அமுலுக்கு வந்து விட்டது!

அன்றிரவு சாப்பிட்டுக்கொண்டிருந்தான் அழகேசன். பரிமாறிக் கொண்டிருந்த கமலி கேட்டாள், ''இட்லி எப்படி இருக்குங்க?....''

''சூப்பர்! மல்லிகைப் பூ தோற்றது. சாப்பிட்டுக்கிட்டே இருக்கலாம் போலிருக்கு...'' - முகத்தில் அநியாயத்திற்குச் சந்தோஷம் காட்டினான்.

''சட்னி ருசியாச் செய்திருக்கேனா?...''

''டாப், டக்கர்! தேவாமிர்தம் மாதிரி இருக்கு....''

ஆனால், குழந்தையைத் தூங்க வைத்து விட்டு வந்து, அவள் சாப்பிட்ட போது, கரீரென்றது.

மாவு ரொம்பப் புளித்து விட்டது போலும். இட்லியை வாயில் வைக்க முடியவில்லை. ஒரே புளிப்பு. சட்னி அதை விட! தவறுதலாக இரண்டு தடவை உப்புப்

போட்டு விட்டிருக்க வேண்டும்!

இருப்பினும் வீட்டில் 'ஆஹா ஓஹோ' வைத் தவிர வேறு பேச்சே இருக்க வில்லை!

முதன் முதலாகத் தானே வெட்டி, தானே தைத்த ஜாக்கெட்டை அணிந்து கொண்டு, தோழி வீட்டு விஷேசத்திற்குப் புறப்பட்டாள் கமலினி.

''ஜாக்கெட் எப்படி இருக்குங்க? நல்லாத் தைத்திருக்கேனா?...''

''ஓ, கரெக்டாத் தைச்சிருக்கே. ஜோரா இருக்கு!'' என்றான் அழகேசன், முகத்தில் மலர்ச்சியை வரவழைத்துக் கொண்டு!

தோழியின் வீட்டிலும் அப்படித்தான்.

தோழியின் பிறந்த நாள் விழாவிற்கு வந்திருந்த எல்லாத் தோழிகளுமே கமலினியின் கன்னி முயற்சி ஜாக்கெட்டை வானளாவப் புகழ்ந்தார்கள்.

''முதல் ஜாக்கெட்டே அற்புதமாத் தைச்சிருக்கியே!'' என்றாள் விஜயா.

''நீ எதைச் செய்தாலும் கச்சிதமாத்தான் செய்வே கமலி!'' என்றாள் மரகதம்.

''நாங்கல்லாம் உங்கிட்டே கத்துக்கணும் வெட்டறதுக்கு. பர்ஃபெக்ட் ஃபிட்டிங் கமலினி...'' என்று புகழ்ந்து தள்ளினாள் லதா. கமலினிக்கு வானில் மிதப்பது போலிருந்தது.

விசேஷம் முடிந்து விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டவள், மறந்து விட்ட கைப்பையை எடுப்பதற்காகத் திரும்பச் சென்ற போது, அதே தோழிகள் பேசிக் கொண்டிருப்பது காதில் விழ, அப்படியே அதிர்ந்து நின்றாள்.

''கமலிக்கு ரொம்பத் தாண்டி பெருமை! ஜாக்கெட்டா தைச்சிருக்கா? சகிக்கலை!...'' என்று கிண்டலாகச் சொல்லிக் கொண்டிருந்தாள் லதா.

''ஆமாம் லதா! என்னா கட்டிங்கோ தெரியலை, பாதிமுதுகு தெரியுது. கண்றாவி...'' ஆமோதித்தாள் விஜயா.

''கையைப் பார்த்தியா ஒண்ணு குட்டையா, ஒண்ணு நீளமா! ஒண்ணு டைட்டு, இன்னொண்ணுலூஸ்!...'' மரகதம் சொல்லி விட்டுச் சிரித்தாள்.

கமலினியின் கண்கள் சிவந்தன.

ஒப்பந்தமெல்லாம் ஒண்ணும் வேண்டாங்க. பழையபடியே இருக்கலாங்க,'' என்றாள் கமலினி, குரலைத் தாழ்த்திக் கொண்டு.

''ஏன் கமலி?.... என்னாச்சு?....'' ஆச்சரியப்பட்டான் அழகேசன்.

''இந்த ஒரு வாரத்திலேயே நான் உணர்ந்திட்டேங்க. வெறும் புகழ்ச்சியையும், பாராட்டையும் மட்டும் பகிர்ந்துக்கும் போது, நமக்குள்ளே ஏதோ ஒரு அந்நியத் தன்மை ஏற்படுறதையும், நெருக்கம் குறைந்து, நாம விலகி விலகிப் போறது மாதிரி உணர்வு ஏற்படுறதையும் நான் அனுபவிச்சிட்டேங்க. அது ஒரு போலி வாழ்க்கையாத் தாங்க இருந்துச்சு. உண்மையான ஒட்டுறவு இல்லாம, 'யாரோ எவரோ நமக்கென்ன?' என்று இருக்கிறவங்கதாங்க அப்படி ஒரு போலி வாழ்க்கையை வாழ முடியும்!....''

தலையைக் குனிந்து கொண்டே கமலினி பேசப் பேசகண்ணிமைக்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் அழகேசன்.

''நம் முகத்துக்கெதிரே போலியாப் புகழறவங்க எல்லாம், நம் முதுகுக்குப் பின்னாலே கேலிதாங்க பேசறாங்க. நம் முகத்துக்கெதிரே உரிமையோட குறை சொல்லவும் கண்டிக்கவும் செய்றவங்கதான், உண்மையாப் பாராட்டவும் செய்வாங்கன்னு இப்பத்தாங்க புரிஞ்சுக்கிட்டேன்...''

''அப்படின்னா நான் உன்னைப் பழையபடி குற்றம் சொல்லலாம்னு சொல்றியா?...''

''நான் என்னை மாத்திக்குவேங்க. உங்க விமரிசனத்தைத் தாங்கிக்கிற மனப் பக்குவத்தையும் கொஞ்சம் கொஞ்சமா ஏற்படுத்திக்குவேங்க...''

''ஆஹா! என்ன இருந்தாலும் கமலின்னா கமலி தான்! சமர்த்து! என் பெண்டாட்டியாச்சே! அதனாலே தான் இவ்வளவு சீக்கிரமா...''

''ஐயோ!... நிறுத்துங்க. அந்த ஒப்பந்தம் தான் கேன்சல்டுன்னு சொல்லியாச்சு கல்லே?... அப்புறம் ஏன் வீணா....'' சிணுங்கிய கமலினியை அன்போடு அணைத்துக் கொண்டான் அழகேசன்!

## நினைவுபடுத்துகிறோம்......

✸ அமரர் கல்கி நினைவாக - பொன் விழா சிறுகதை; நாடகம்; கவிதைப் போட்டிகளின் முடிவு தேதி: ஜூன் 15.

# இந்தத் தடவையும் 'ஜெ' ஆட்சியைப் பிடிக்காவிட்டால்?


பலம்? பலவீனம்?

★ எம். இராஜேந்திரன், வால்குடி.

? அத்வானியின் பலம் எது? பலவீனம் எது?

! பலம்: ராமராஜ்யம் உருவாக வேண்டும் என்ற அவரது சீரிய எண்ணம். பலவீனம்: அதற்கு ஒத்து வராத அவருடைய சில பல கொள்கைகள்.

★ பேப்பர் கார்த்திக், இராணிப்பேட்டை.

? கல்கி கூட வர வர ஜெ எனும் மாய வலையில் விழ்ந்து வருவது போல் தோன்று கிறதே?

!அலையைப் பற்றிப் பேசினாலே வலை யில் விழுந்து விட்டதாக அர்த்தம் பண்ணிக் கொள்ளும் தி. மு. க. தொண்டர்களுக்கு ஒரு ரோஷம் பிறக்க வழி செய்திருக்கிறதே!

★ முஸ்தபா கமால், தக்கோலம்.

? இ. காங்கிரஸ் தமிழ்நாடு சட்டசபைக்குப் போட்டியிடும் அனைத்து இடங்க ளிலும் வெற்றி பெறுமானால் அந்த வெற் றியின் புகழ் யாரைச் சேரும்?

! சரணாகதி வீரர்களை!

★ கே. ஆர். தேவேந்திரன், கொண வட்டம்.

? இந்தத் தடவையும் ஜெயலலிதா ஆட்சியைப் பிடிக்கா விட்டால்?

! இந்த முறையாவது நல்ல எதிர்க்கட்சித் தலைவராக விளங்கி, எல்லோருடைய பாராட்டையும் பெற முயற்சி செய்ய வேண் டும்.


டைக்ஸ் மர்மம்!


ஆட்சியைப் பிடிக்கா விட்டால்....

★ ஜி. ஜி. கிருஷ்ணன், விசலூர்.

? கல்கியை ஜெயின் (ஜெயலலிதா) அனுதாபி என்று ஒரு பத்திரிகை குற்றம் சாட்டியுள்ளதே?

! அந்தப் பத்திரிகைக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்!

★ ஆர். வேங்கடேசன், குத்தாலம் ★

? அரசியல்வாதிகளுக்குத் தாங்கள் கூறும் அறிவுரை?

! அவர்களுக்கு அறிவுரை ஏதும் தேவை யில்லை. நமது தலைவர்கள் எல்லோருமே கெட்டிக்காரர்கள். அவர்களுக்கு நல்லது கெட்டது தெரியும். தெரிந்தேதான் தவறு கள் செய்கிறார்கள். இதற்குக் காரணங்கள் இரண்டு. முதலாவது சுயநலம். இரண்டா வது, அந்தச் சுயநலத்துக்குத் தீனி போட வசதியாக நமது தேர்தல் முறையும், தொழில் - பொருளாதாரக் கொள்கைகளும் அமைந்திருப்பது. இரண்டாவதைச் சரிப்ப டுத்தி விட்டால் முதல் காரணமான சுயந லத்துக்கு இடமே இல்லாமல் போகும். ஆனால் துரதிர்ஷ்டம் என்னவெனில், இந்த இரண்டாவது அம்சத்தைச் சரிப்படுத்த வேண்டியதும் நமது அரசியல் தலைவர் களே! சரிப்படுத்த விடாமல் அவர்களைத் தடுப்பது, அவர்களுடைய சுயநலமே! விஷ வட்டம்.

★ குருகிருஷ்ணா, திருச்சி.

? சமீபத்தில் தங்களை அதிர வைத்த அநாகரிகம்?

! வேறு என்ன, நடையாய் நடக்க வைக் கும் பஸ் ஸ்ட்ரைக்தான். பஸ்ஸை நிறுத்தக் கூடாத இடத்தில் நிறுத்திய முதல் தவறில் ஆரம்பித்துச் சங்கிலித் தொடர் போல் பல தவறுகள் நடந்து விட்டன. போலீஸ் - பஸ் ஊழியர்கள் ஆகிய இரு தரப்பிலும் வெட் கித் தலைகுனிய வேண்டிய நிகழ்ச்சிகள் பல. இடையில் அகப்பட்டுக் கொண்டு தவிப்பவன் பஸ் பயணி. பிரச்னைக்குச் சம்பந்தமில்லாத பொது மக்களைப் பழி வாங்குவது போல் இப்படி நடந்து கொள் வது மாபெரும் அநீதி என்பதைப் புரிந்து கொண்டால் இருதரப்பினரும் சட்டுப்புட்

## நீங்கள் கேட்டவை — தராசு

டென்று விட்டுக் கொடுத்துச் சமரசம் காண முடியும். ஆனால் நம் தேசத்தில் மக்களுக்கு உள்ள மதிப்பு இவ்வளவுதான். தேர்தலுக்கு மட்டும்தான் காலைப் பிடி; அதற்கு முன்னும் பின்னும் மென்னியைப் பிடி என்ற கதைதான்.

★ எஸ். யோகலிங்கம், சென்னை.

? 'இழந்த கௌரவத்தை மீண்டும் பெறுவோம்' என்று ராமராவ் கூறியிருப்பது பற்றி?

! ஜனதா தளம் பிரிக்கப் போவது காங்கிரஸ் வோட்டுக்களையா, பி. ஜே. பி. வோட்டுக்களையா என்ற நிலை வடக்கே தோன்றிய பிறகு, தேசிய முன்னணித் தலைவர், இழந்த கௌரவத்தை மீண்டும் பெறுவது என்பது ரொம்பக் கஷ்டம். ஒருவேளை அவர் 'விசுவாமித்ரர்' படம் டப்பா ஆனதைப் பற்றி இப்படிக் கூறியிருந்தாரானால் சரி, அடுத்த திரைப்படத்தில் கௌரவத்தைத் திரும்பப் பெற மெய்யாலும் முயற்சி செய்யலாம்.



இழந்த கௌரவம்

ஆட்சிக் கலைப்பு...?

★ பாலசுப்பிரமணியன், சென்னை.

? ஜெயலலிதா தமது தேர்தல் பிரசாரத்தின் போது, தமது தேர்தல் அறிக்கையில் குறிப்பிடாத புதிய புதிய வாக்குறுதிகளை அள்ளி வீசுகிறாரே?

! ரொம்ப நாளைக்கு முன்னால் 'லக்ஷ்மிகாந்தன்' என்று ஒரு நாடகம். அவன் ஒரு மோசடி மன்னன். ஒரு வீட்டில் தங்கப் போக 'வாடகை ஆயிரம் ரூபாய்' என்பான் சொந்தக்காரன். 'ஓ. கே.' என்பான் லக்ஷ்மிகாந்தன். அவன் அப்பால் போனதும் நண்பன் கேட்பான்: 'கட்டி வருமாடா?' என்று. 'நாம் என்ன கொடுக்கவா போறோம்?' என்பான் லக்ஷ்மிகாந்தன்! ஒற்றை வாடை தியேட்டரில் கொட்டகை அதிரும். 'ஜெ' என்று இல்லை. பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்களும் லக்ஷ்மிகாந்தனைப் போல்தான். வாக்குறுதிகளை என்ன, நிறைவேற்றவா போகிறார்கள்!



ஆட்டம்...



...சூப்பர்!

★ டி. சீனிவாசன், சென்னை.

? டேவிஸ் கோப்பை ஏஷியானா போட்டியில் ரமேஷ் - லியாண்டர் ஆட்டம் சூப்பர்தானே?

! இந்த வாரம் டென்னிஸ் ரசிகர்களுக்கு மட்டுமின்றி கிரிக்கெட் விசிறிகளுக்கும் செமை விருந்து. ரஞ்சி கோப்பை இறுதி ஆட்டம் என்ன த்ரில்லுங்கறேன்! 'இவற்றின் ஹைலைட்ஸை டி.வி.யில் காட்ட முந்திக் கொள்ளப் போவது யார்? எம். ஆர். எஃப், டன்லப், ரிலையன்ஸ் போன்ற எந்த நிறுவனத்துக்கு அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது?' என்பதுதான் நம் முன் எழும் ஆர்வக் கேள்வி.

★ வெ. செந்தில் குமார், கொங்கணாபுரம்.

? நமது அரசியல்வாதிகளுக்கு அடிக்கடி தலைவலி தரும் பிரச்னை எது?

! ஆட்சிக் கலைப்பும் ஜனாதிபதி ஆட்சி திணிக்கப்படுதலும். லேட்டஸ்ட்டாக பீகாருக்கு வந்திருக்கிறது அபாயம்!

★ என். ராஜா, சென்னை.

? கலைஞர் அனுப்பிய விடுதலைப் புலிகள் பற்றிய டெலக்ஸ், பிரதமர் காரியாலயத்திலிருந்து மாயமாய் மறைந்ததன் மர்மம் என்ன?

! அது யாருக்கோ ஒரு தர்மசங்கடத்தை ஏற்படுத்தும் என்பதுதான் காரணமாக இருக்க வேண்டும்!

★ மேஜர் தாசன், ஈரோடு.

? வேத சாஸ்திரம் படித்த இளைஞர் ராமநாதன் கும்பகோணத்தில் அ. தி. மு. க. சார்பில் போட்டியிடுகிறாரே?

! அரசியல் சாஸ்திரம் வேறு என்பதைச் சீக்கிரமே புரிந்து கொள்வார்!

★ ரூ. 20 பரிசு பெறுபவர்:
ஆர். வேங்கடேசன்,
5, உத்தரமேல வீதி,
குத்தாலம் 609 801.

# பாய் விரித்தது போல் வாக்குச் சீட்டு!

## "259 பேர் என்ன, பணவசதி இருந்திருந்தால் ஆயிரம் பேரைக் கூட வேட்பாளராக நிறுத்தியிருப்போம்!"

ஒரு குட்டிப் பாய் அளவுக்கு வாக்குச் சீட்டுக்களை அச்சடிக்க வைத்து விட்டார்கள் பள்ளிப்பட்டுத் தொகுதியில் போட்டியிடுபவர்கள். அரசியல் கட்சி வேட்பாளர்கள் ஐந்து பேரைத் தவிர, 259 சுயேச்சைகள் போட்டியிடுகின்றனர். இப்படி ஒரு தலைவலியைத் தேர்தல் கமிஷனுக்கு ஏற்படுத்தியவர்கள் பள்ளிப்பட்டுப் பகுதி நெசவாளர்கள். காரணம் என்ன?

''இரண்டு வருஷத்துக்கு முன் விசைத்தறிக்கு மின்சாரக் கட்டணம் ஒரு யூனிட்டுக்கு ஐம்பது பைசா. இப்போ ஒரு ரூபாய் ஐம்பது பைசான்னு உயர்த்திட்டாங்க. இது ஆந்திரா எல்லையிலே இருக்கிற ஊர். கூப்பிடு தூரத்திலே ஆந்திராக்காரங்க வசிக்கிறாங்க. அவங்க இன்னும் தறிக்கு ஒரு யூனிட்டுக்கு வெறும் 45 பைசாதான் கட்டறாங்க. என்ன அநியாயம் பாருங்க? இதை அரசு குறைக்கணும்.

''இரண்டாவதாக் கைத்தறி நெசவு செய்யறவங்களும் இங்கே நிறைய இருக்காங்க. நான் கூட கைநெசவுதான். இதுவரை எங்ககிட்டக் கைத்தறித் துணிகளை அரசு கொள்முதல் செய்துக்கிட்டிருந்தது. இப்போ திடீர்னு நிறுத்திட்டாங்க. அதனால நெசவு செய்த கைத்தறித் துணிகளை குடவுன்லே அடைச்சு வச்சிருக்கோம். இந்த ஊர்லே மொத்தம் 25 லட்சம் ரூபாய்த் துணிகளை ஒரு வருஷமா அடைச்சு வச்சிருக்கோம். இது மாதிரி இதைச் சுற்றியுள்ள இருபது முப்பது கிராமங்கள்லேயும் அடைச்சு வச்சிருக்காங்க. அப்ப எவ்வளவு ரூபாய்க் கைத்தறித் துணிகள் தேங்கிக் கிடக்குன்னு பாருங்க... எத்தனை குடும்பங்களுடைய உழைப்பு வீணாப் போயிருக்கு? அரசு இந்தத் துணிகளை மீண்டும் கொள்முதல் செய்யலைன்னா எங்க பாடு அதோகதி

◆ எம். என். கண்ணப்பன்





◆ என். ராதையா



◆ சுயேச்சை வேட்பாளர் களில் சிலர்...



◆ ஏகாம்பர ரெட்டி

தான்!

''இந்த இரண்டு விசயத்திற்காகவும் பல தடவை கலெக்டரைப் பார்த்தோம். எம். எல். ஏ., கைத்தறி மந்திரின்னு அலைஞ் சோம். ஒருத்தரும் கண்டுக்கலே! தேர்த லைப் புறக்கணிக்கலாம்னு நினைச்சோம். அதுவும் எல்லோரும் செய்யற சாதாரண விசயமாய்ப் போயிடும். அதனால புது மாதிரிப் போராட்டம் பண்ணி எல்லோ ருக்கும் எங்க பரிதாப நிலையைப் பாருங் கன்னு காட்டணும்னு நினைச்சோம். ஒரு தறிக்குத் தலா ஐம்பது ரூபாய்னு எல்லா ஊர்லேயும் வசூல் பண்ணி, எங்க நெச வாளர்ங்களிலேயே 259 பேரை வேட்ப ாளர்களா நிறுத்தினோம். ஒரு வேட்பா ளரை முன்மொழிய ஒருவர்... வழிமொழிய ஒருவர்... இரண்டு வேன் களை வாடகைக்குப் பிடிச்சு, மூன்று நாட்கள் பள்ளிப்பட்டிலிருந்து காஞ்சிபுரத் திற்குத் தினசரி இரண்டு ட்ரிப் அடிச்சு, வேட்பாளர்களை ஏத்திட்டுப் போய் மனுத் தாக்கல் பண்ணினோம்... எங்களிடம் இருந்த பண வசதிக்கு இவ்வளவு பேருக் குத்தான் டெபாசிட் கட்ட முடிஞ்சுது. இன்னும் பணம் இருந்திருந்தா ஆயிரம் பேருக்கு மேல கூட வேட்பாளர்களை நிறுத்தியிருப்போம்!'' என்றார், அத்திமாஞ் சேரிப் பேட்டை பாபுஜி கூட்டுறவு நெச வாளர் சங்கத்தின் தலைவர் எம். என். கண்ணப்பன்.

சரி, இத்தனை பேர் போட்டியிட்டாலும் இவர்களால் வெற்றி பெற முடியுமா?

''வெற்றி பெற்று எம். எல். ஏ. வாக வரணும்கிறதோ வோட்டைப் பிரிக்கணும் கிறதோ எங்க வேட்பாளர்களின் நோக்க மில்லே. எந்த விதத்திலையாவது எங்க பிரச்னையை அரசுக்கு எடுத்துச் சொல்ல ணும்னு செய்ததுதான் இது...'' என்றார் அவர்.

பள்ளிப்பட்டு முன்னாள் சட்டமன்ற உறுப்பினரும் தற்போதைய இ.காங்கிரஸ் கட்சி வேட்பாளருமான ஏகாம்பர ரெட்டி யாரிடம் இந்த நெசவாளர்கள் பிரச்னை குறித்துக் கேட்ட போது, ''நான் எம். எல். ஏ. வாக இருந்த போது இந்தப் பிரச்னை யைப் பற்றி என்னிடம் பேசினார்கள். நானும் சட்டமன்றத்தில் கைத்தறி மான்யத் தின் போது, இரண்டு முறை இவர்கள் பிரச் னையை எடுத்துப் பேசினேன். கலைஞர் அரசு ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை! எதிர்க்கட்சி எம். எல். ஏ. வாக இருந்ததால் என்ன செய்ய முடியும் சொல்லுங்க? மீண்டும் நான் இந்தத் தேர்தலில் வெற்றி பெற்றால் இவர்களின் பிரச்னையை நிச் யம் கவனிப்பேன். இது பற்றிச் சுயேச்சை யாகப் போட்டியிடும் 259 நெசவாளர்க ளையும் சந்தித்துப் பேசியுள்ளேன்!'' என்று குறிப்பிட்டார்.

''முன்னாள் எம். எல். ஏ. ஏகாம்பர ரெட்டியார் வெற்றி பெற்ற பின்பு, இந்தத் தொகுதிப் பக்கமே தலைகாட்டவில்லை! இது எல்லோருக்கும் தெரியும். நெசவா ளர்கள் பிரச்னையில் அக்கறையே எடுக்கா மல், கலைஞர் ஆட்சியைப் பற்றிக் குறை கூறுகிறார். நெசவாளர்கள் பிரச்னையை ஏகாம்பர ரெட்டியார் அக்கறையோடு கவ னித்துச் செயல்பட்டிருப்பாரானால் இந்தப் பிரச்னை சுலபமாக முடிந்திருக்கும்.



ஃபுல் ரிசர்வ்ட்

ஓ அய்யாமாரே!
தேர்தல் வருகிறது
யாரும்
தெருவோரம் நில்லாதீர்!
சுவர் கிடைக்காத சில
சுகவீனக் கட்சிகளும்
சுவர் கிடைத்தும் போதாத
கறுகறுப்புக் கட்சிகளும்
உங்கள் முதுகே போதுமென்ற
முடிவுக்கு வந்து அதிலும்
முத்திரை குத்தலாம்
ஃபுல் ரிசர்வ்ட் என்று!

-- எம். ஜோசப்ராஜ்

தற்போது தி. மு. க. சார்பில் போட்டியிடும் வேட்பாளர் லோகநாதனும் நாலும் நெசவாளர்களைச் சந்தித்துப் பேசினோம். லோக நாதன் வெற்றி பெற்று எம். எல். ஏ. வாகி, கலைஞர் மீண்டும் ஆட்சிக்கு வந்தால், ஒரு யூனிட் ஐம்பது பைசாவுக்கு என்ன? நெசவாளர்களுக்கு இலவசமாகவே மின்சாரம் வழங்க ஏற்பாடு செய்வோம்!'' என்றார் பள்ளிப்பட்டு தி. மு. க. நகரச் செயலாளர் என். ராதையா.

''இரண்டு கட்சிக்காரர்களும் தங்களோட பிரச்னைகளைத்தான் பெரிசாகப் பேசுகிறார்களே தவிர, மக்களோட பிரச்னையை ஒருவருமே பேசக் காணோம்! பள்ளிப்பட்டு தாலுகா அந்தஸ்து பெற்ற ஒரு நகரம். இப்படிப்பட்ட நகரில் ஒரு தந்தி அலுவலகம் கூடக் கிடையாது. போலீஸ் ஸ்டேஷன்லே வாகன வசதியே கிடையாது. எங்காவது அடிதடின்னா திருத்தணிக்குப் போன் போட்டு, வாடகை வேன் வரவழைச்சு, அப்புறம்தான் போலீஸ் போகணும். இதை விடப் பெரிய கொடுமை, இங்கிருந்த அரசு மருத்துவமனையைக் கூட ஆரம்ப சுகாதார நிலையமா மாத்தினது தான். இப்போது அதில் ஒரு வசதியும் கிடையாது! சமீபத்துலே 'குமார ராஜா பேட்டை' தீப்பிடிச்சு நாசமாச்சு! உள்ளூர்ல ஒரு தீயணைப்பு நிலையம் இருந்திருந்தால் தடுத்திருக்கலாம். இது மாதிரி தீப் பிடிச்சா 45 கி. மீ. தூரத்தில் உள்ள திருத்தணியிலிருந்தோ ஐம்பது கி. மீ. தூரத்தில் உள்ள அரக்கோணத்திலிருந்தோதான் தீயணைப்பு வண்டி வரணும். அதற்குள்ள எல்லாம் முடிஞ்சிடும். பள்ளிப்பட்டுக்கு இரவு ஏழரை மணிக்கு மேல எந்தப் பஸ்ஸும் வராது. தொகுதியின் தலைநகருக்கே இப்படி என்றால் தொகுதியிலுள்ள மற்ற ஊர்கள் எப்படி இருக்கும்னு நீங்களே யூகிச்சுக்குங்க...'' என்று வேதனையோடு குறிப்பிட்டார் பள்ளிப்பட்டு நகரவாசியான சம்சுதீன்.

- பாரதிபாலன்
படங்கள்: ராஜா

## ஃப்ரிஜ் பரிசு: கூப்பன் நெ. 5

விஷயம் ரொம்ப சிம்பிள். 'நேற்று வரை நந்தவனம்' தொடர்கதையில் நாங்கள் ஒவ்வொரு வாரமும் வேண்டுமென்றே செய்து வரும் தவறைக் கண்டுபிடித்து ஒவ்வொரு வாரமும் கூப்பனைப் பூர்த்தி செய்து, கத்திரித்துப் பத்திரமாக வைத்துக்கொள்ளுங்கள். கதை முடியும் வாரம் எல்லாக் கூப்பன்களுடன் 5 - 10 வரி விமர்சனமும் எழுதி அனுப்பினால், ஆல் கரெக்டுக்கு, அல்லது அதிகபட்ச சரியான விடைக்கு ஃபிரிஜ் பரிசு! ஆறுதல் பரிசுகளும் உண்டு! இந்த வாரம் வேண்டுமென்றே செய்யப்பட்டுள்ள......

தவறு: ______________________

திருத்தம்: ______________________



ஜெர்மன் நாடாளுமன்றம்

# தில்லுமுல்லு இல்லாத தேர்தல்கள்!

## ஜெர்மனியில் தேர்தல் எப்படி?

மக்களின் அரசியல் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு, ஜனநாயகத்தின் முக்கிய அங்கங்களான அரசியல் கட்சிகள் பங்கு கொள்ளும் வேள்வியாகவே இங்கு தேர்தல் கருதப்படுகிறது. கட்சிகள் ஜனநாயக முறைப்படி இயங்க வேண்டும். தங்களிடமிருக்கும் நிதிக்கும், சொத்துக்களுக்கும் மூலம் எது என்று மக்களுக்கு எடுத்துச் சொல்லுவதோடு, செலவுக்கும் கணக்குக் காட்ட வேண்டும். இதை, கட்சிகள் சட்டம், 1984 வலியுறுத்துகிறது.

கட்சித் தலைவர்களின் நோக்கத்தினாலோ, கட்சி ஆதரவாளர்களின் நடத்தையினாலோ, நாட்டின் சுதந்தர ஜனநாயகக் கொள்கைகளுக்கு ஊறு விளைவிக்க நினைத்தால், கட்சியைச் சட்டவிரோதமானது எனத் தடை செய்து, பிறகு கட்சியையே மூட்டை கட்டி வீட்டுக்கு அனுப்பி விட முடியும்!

நாடாளுமன்றத்தை 'புண்டஸ்டாக்' (Bundestag) என்கிறார்கள். இதன் தேர்தல் முறை சற்றுக் குழப்பமானது. தனிப்பட்ட, மக்கள் பிரதிநிதித்துவ முறையில் அமைந்தது. ஒவ்வொரு வாக்காளருக்கும் இரண்டு வோட்டுக்கள் உண்டு. ஒன்று, தமக்கு விருப்பப்பட்ட வேட்பாளருக்குப் போட; இன்னொன்று கட்சிக்குப் போட. தனிப்பட்ட விருப்ப வோட்டு முறையில் 248 உறுப்பினர்களும், கட்சி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட 248 உறுப்பினர்களும் - ஆக 496 பேர் இதுவரை இருந்த புண்டஸ்டாகில், இப்போது எண்ணிக்கை சற்று அதிகரித்திருக்கிறது. புண்டஸ்டாகில் கட்சி உறுப்பினர்களின் எண்ணிக்கை, பதிவாகிற வோட்டுக்களின் சதவிகிதத்தின் படியே அமையும்.

தேசிய அளவில், புண்டஸ்டாகில், கிறிஸ்டியன் டெமாக்ரடிக் யூனியனும்,

கிறிஸ்டியன் சோஷலிஸ்ட் யூனியனும் கூட்டமைப்பாக இருந்து செயல்படுகி றார்கள். மாநிலங்களவைக்குப் பெயர் புண்டஸ்ராட்.

-- எஸ். வி. என்.

## பிரான்ஸ் நாட்டில் தேர்தல் முறை

வேட்பாளர்கள் தனியாகத் தங்களைப் பற்றியோ தங்கள் கட்சிகளைப் பற்றியோ விளம்பரம் செய்யக் கூடாது! அரசாங்கமே எல்லாக் கட்சிகளின் விளம்பரங்களையும் ஏற்று நடை முறைப் படுத்தும். இதில் ஆளுங்கட்சி, சிறிய கட்சி, பெரிய கட்சி என்ற பாரபட்சம் இருக்காது.

பொதுக் கூட்டங்கள் நடை பெறுவது மிகக் குறைவு. தொலைக்காட்சி வானொலி மூலமே தங்கள் கொள்கைகளை விளக்கு கின்றார்கள். தொலைக்காட்சி நிறுவனத்தி னர் எல்லாக் கட்சித் தலைவர்களையும் நிலையத்திற்கு அழைத்து, அவரவர் கொள்கைகளையும் திட்டங்களையும் கூற வைத்து, விவாதிக்கச் செய்கிறார்கள். இதனை நேரடியாக ஒளிபரப்புகின்றார்கள். இந்த விவாதங்கள் மிகவும் கண்ணிய மாகவே நடை பெறும்.

தேர்தல் இரண்டு முறை நடை பெறும். காரணம், வெற்றி பெறும் வேட்பாளர் கண்டிப்பாக 50% மக்களின் ஆதரவைப் பெற வேண்டும்! எனவே, ஒரு தொகுதியில் நால்வர் போட்டியிடுகின்றனர் என்றால் முதலாமவர் 45% இரண்டாமவர் 38% மூன்றாமவர் 12% நான்காமவர் 5% இந்த விகிதாசாரப்படி வாக்குகள் விழலாம். இரண்டாம் கட்டத் தேர்தலில் முதல் இரு வர் மட்டுமே போட்டியிட முடியும். இதன் மூலம் வெற்றி பெறுபவர் 50 சதவிகி தத்திற்கும் கூடுதலான மக்களின் ஆதரவைப் பெற்றவராக இருக்கின்றார். இந்தியா விலோ 40 சதம் மக்களின் ஆதரவைப் பெற்று, 60 சதவீத மக்களின் எதிர்ப்பைப் பெற்றவர் ஆட்சிக்கு வர முடிகிறது! மேலும் தனி நபர்களுக்கு வாக்களிக்கும் முறை இங்கு இல்லை. கட்சிகளுக்கே வாக்களிக்கின்றார்கள்.

வெற்றியாளர்களின் பெயர்கள் அந்தக் கட்சிகளின் தலைமைப்பீடம் கொடுக்கும் பெயர்களின் வரிசைக் கிரமப்படி தேர்வு செய்யப்படும். வெற்றி பெற்ற வேட்பாளர் இறந்து விட்டால், அந்தக் கட்சியின் பெயர் வரிசையில் அடுத்து இருப்பவர், தேர்தல் நடைபெறாமலேயேதேர்தல் ஆணையாள ரால் வெற்றி பெற்றவராக அறிவிக்கப் படுவார். இது இடைத் தேர்தல் தலை வலியை நீக்குகிறது.

-- மு.நா. தெய்வேந்திரன்.

# டீவி நாடகங்கள் எப்படி?

டீ. வி. யில், நிலைய நாடகங்கள் தவிர, விளம்பரதாரர் ஆதரவில் தொடர் நாடகங்களும் இடம் பெறுகின்றன. தமிழ் நாடகங்கள் மட்டுமின்றி, ஹிந்தி நாடகங்களும் ஒளிபரப்பாகின்றன. சமீ பத்திய நாடகங்க ளைப் பார்த்த அனுப வத்தை வைத்து ஒட்டு மொத்தமாக ஒரு விமர்சனம் எழுதுங்கள். ஒப்புநோக்க ஹிந்தி எப்படி? தமிழ் எப் படி? விளம் பரதாரர் கொடுக்கும் ஏராளப் பணத் துக்கு நியாயம் கிடைக்கிறதா, அல்லது வெ று ப் பை த் தா ன் வளர்க்கிறதா? வெளுத்துக் கட்டுங்கள் பார்க்கலாம்!

சிறந்த ஒரு பக்கக் கட்டுரைக்குப் பரிசு ரூ. 50/- சிந்தனைச் சிதறல்களுக்கு ஆறு தல் பரிசு. பொன் விழா மேடையில் ஒரு வருக்குச் சிறப்புப் பரிசும் உண்டு! கல் லூரி முகவரி, வீட்டு முகவரி இரண்டும் குறிப்பிடவும். முடிவு தேதி: 25.5.91. உறை மீது ''டீ. வி. நாடக விமர்சனம்'' என்று குறிப்பிடவும்.

கல்கி பொன்விழா
பரிசுத் திட்டம்




கல்லூரி மாணவர்
கட்டுரைப் போட்டி

அப்பா!
அஞ்சு வருஷத்துக்கு
ஒரு தடவைதானே எலக்ஷன்
நடக்கும்னு சொன்னீங்க!

ஒரு நிலையான அரசு மட்டுமே மக்கள் தீர்ப்பின்
புனிதத்தன்மையை மதித்து நடக்கும்

நிலையான அரசுக்கு வாக்களிப்பீர்!



**இ. காங்கிரசுக்கு** வாக்களிப்பீர்!

MEGA/D/91/TAM

Issued by The General Secretary (Incharge Publicity), All India Congress Committee (I) 24, Akbar Road, New Delhi

அம்மா!
கோயில்னு என்ன?
மசூதின்னு என்ன?
வித்தியாசம்
இருக்கா?

எம்மதமும் சம்மதம் என்பதுதான் இ. காங்கிரஸ் கட்சியின் கொள்கை.

ஒரு நிலையான அரசினால் மட்டுமே அமைதிக்கும் ஒற்றுமைக்கும் உறுதி அளித்திட முடியும்.

*நிலையான அரசுக்கு வாக்களிப்பீர்!*

# இ. காங்கிரசுக்கு வாக்களிப்பீர்!



MEGA/D/91TAM

Issued by The General Secretary (Incharge Publicity), All India Congress Committee (I) 24, Akbar Road, New Delhi

அம்மா!
நான் ஏன் இன்னிக்கு
ஸ்கூலுக்கு போகக் கூடாது?

ஒரு நிலையான அரசினால் மட்டுமே நம்முடைய
பாதுகாப்பிற்கு உறுதி அளிக்க முடியும்
-மக்கள் இயல்பான வாழ்க்கை நடத்துவதற்கும்,
ஒவ்வொரு குழந்தையும் பள்ளி செல்லுவதற்கும்.

*நிலையான அரசுக்கு வாக்களிப்பீர்!*



**இ. காங்கிரசுக்கு** வாக்களிப்பீர்!

MEGA/A/91TAM

Issued by The General Secretary (Incharge Publicity), All India Congress Committee (I) 24, Akbar Road, New Delhi.

சித்தப்பா,
உங்க வேலை
விஷயம் என்னாச்சு?



ஒரு நிலையான அரசினால் மட்டுமே பத்து ஆண்டுகளுக்குள், 10 கோடி புதிய வேலை வாய்ப்புக்களை உருவாக்க முடியும்.

நிலையான அரசுக்கு வாக்களிப்பீர்!



**இ. காங்கிரசுக்கு** வாக்களிப்பீர்!

Issued by The General Secretary (Incharge Publicity), All India Congress Committee (I) 24, Akbar Road, New Delhi.

MEGA/A/91TAM

# 'கட்-அவுட்'

# கலாசாரம்

**க**ல்யாண மாப்பிள்ளைக்குக் கூட இனி மண்டப வாசலில் கட்-அவுட் வைக்க வேண்டிய காலம் வந்தாலும் ஆச்சரியப்படு வதற்கில்லை. இந்த நிலையில் கட்-அவுட் இல்லாமல் தேர்தலா? ஊரெங்கும் அரசி யல் தலைவர்களின் கட்-அவுட் மயம்! கட்-அவுட் எப்படிச் செய்யப்படுகிறது? விளக்குகிறார், 'ஸ்டைலோ ஆர்ட்ஸ்' நிறுவனத்தைச் சேர்ந்த ஆல்ஃபிரட்.

''அறுபதடி உயர கட்-அவுட் வைப்பது, இப்போது ரொம்ப ரொம்பச் சாதாரண விஷயமாகி விட்டது. இப்படிப்பட்ட பெரிய அளவிலான கட் அவுட்களை ஒரே பீஸ் ஆகச் செய்வது சாத்தியமில்லை. முத லில் பல்வேறு பகுதிகளாய்ச் செய்து, முடிவில் அவற்றை ஒன்றோடொன்று இணைத்து விடுவோம். உதாரணமாக, அறு பது அடியில் ஜெயலலிதா கட்-அவுட் செய்ய வேண்டுமானால் அதற்கு முதலில் ஜெயலலிதாவின் படம் ஒன்று தேவை. அதை ஆறு பகுதிகளாக நெடுக்குவாட்டில் பிரித்துக் கொள்ளுவோம். ஒவ்வொரு பகுதிக்கும் ஒன்று வீதம் ஆறு நெகடிவ்கள் எடுத்துக் கொள்ளுவோம். பிறகு, ஒவ்வொரு நெகடிவையும் புரொஜெக்டர் மூலம், சுவரில் நிறுத்தி வைக்கப்பட்ட பிளைவுட் பலகை மீது மிகத் துல்லிய மாய்ப் பிம்பம் விழச் செய்வோம்.

''பிளைவுட்டில் வஜ்ரமும், சாக் கட்டி பௌடரும் கலந்த கரைசலைப் பூசி, அதில் பிம்பத்தைப் பென்சில் கொண்டு அழுத்தமாய் வரைந்து கொள்வோம். அவுட் லைனை ஒட்டி, பிளைவுட்டைக் கட் பண்ணி விடுவோம். அப்புறம் வண்ணம் தீட்டுதல் ஆரம்பிக்கும். போட்டோவில் உள்ளது போல் கட் அவுட்டில் வண்ணம் தீட்டி மெருகூட்டுவோம். ஒவ்வொரு பகுதி யின் பின்புறமும் ரீப்பர்களைக் கொடுத்துப் பலமூட்ட வேண்டும். அதன் பிறகு ஒவ் வொரு பகுதியையும் இணைத்து முழு உருவக் கட்-அவுட்டைத் தயார் செய் வோம்.

''இதற்கு என்ன செலவாகும்?''

''நாற்பதடி கட்-அவுட் செய்யச் சுமார் ஆறாயிரம் ரூபாய் சார்ஜ். அறுபதடி என்றால் எட்டாயிரம்.''

''பண விஷயத்தில் அரசியல் கட்சிகள் எப்படி நடந்து கொள்கின்றன?''

''அட்வான்ஸ் கொடுத்து, வேலையை ஆரம்பிக்கச் சொல்வார்கள். வேலை முடிந்ததும் மீதிப் பணத்தைக் கொடுத்து விட்டு, டெலிவரி எடுத்துக் கொண்டு போகிற ரகம்தான் அதிகம் என்றாலும், சில கசப்பான அனுபவங்களும் உண்டு. கட்சி யில் முக்கியமானவர் ஆர்டரைக் கொடுத்து, அட்வான்ஸ் தருவார். பிறகு தொண்டர் களை அனுப்பி அவசரப்படுத்தி, ஒரு பகுதிப் பணத்தை மட்டும் கொடுத்துவிட்டு டெலிவரி கேட்பார்கள். தட்ட முடியாது. அப்புறம் மீதிப் பணம் அம்பேல்தான்! இன்னும் சிலர், கடைசி நிமிஷத்தில் பேரம் பேசுவார்கள். வேறு சிலர், ஆர்டர் கொடுக்கும் போதே தங்களுக்கும் கொஞ்சம் கமிஷன் கிடைக்கும்படி பில் கொடுக்க வேண்டுமென்று வெளிப்படை யாகவே சொல்லுவார்கள்!''

கட்-அவுட் தயாரிப்பதோடு ஆல்ஃபிரட் டின் வேலை முடிந்து விடுகிறது. நாற் சந்திகளில் அதனைப் பார்வையாக நிலை நிறுத்தும் பணி, பந்தல் காண்ட்ராக்டர்க விடம் ஒப்படைக்கப்படுகி றது.

சந்திப்பு: மௌஷ்மி.

படம்: யோகா.

• ஆல்ஃபிரட்



# கலைஞர் கோட்டைக்குப் போவார், ஜெ.ஆந்திராவுக்குப் போவார்!

◆ "பாரம்" சிறுகதை எழுதிய ஆசிரியரை எப்படிப் பாராட்டுவதென்றே தெரியவில்லை. மத்தியதரக் குடும்ப நிலை மையை விளக்கி, அதுவும் இரண்டு மூன்று பெண்களைப் பெற்ற பெற்றோர்களின் நிலைமையை அப்படியே கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்திக் கண்களில் கண்ணீரை வரவழைத்து விட்டார்.

தக்கோலம், பி.அ. முஸ்தபா கமால்.

◆ 'சாதி, மத பேதமற்ற சமுதாயம் அமையப் பாடுபடுவோம்' என்று தேர்தல் அறிக்கை வெளியிட்டுக் கொண்டு, அதற்கு நேர்மாறாக ஜாதிப் பிரிவினைகளையும், மத வேற்றுமைக ளையும் தூண்டி விட்டு வோட்டுச் சேகரிக்க அலையும் எல்லா அரசியல் கட்சிகளின் சுயரூபத் தையும் தலையங்கத்தில் நன்றாகவே வெளிச்சம் போட்டுக் காட்டிவிட்டீர்கள். நாடு பிழைக்க வேண்டுமானால் இந்த இரட்டை வேடப்போக் கை இனியேனும் அரசியல் கட்சிகள் கைவிட வேண்டும்.

கும்பகோணம், உடையாளூர் கே. பட்டு.

◆ சினிமா இல்லாமல், இன்று அரசியலே இல்லை என்கிற அவலம். அப்படிப்பட்ட அந்த சினிமாவை வைத்தே, அரசியல்வாதிகளிடம் 'நாட்டைத் திருடாதே' என்று அறைகூவல் விடுத்த பூர்ணசந்திரராவ் தக்க சமயத்தில் பாராட்டப்பட வேண்டியவர்.

பொள்ளாச்சி - 2, ஏ.சி. பிரபு.

◆ 'வாழ்ந்தால் உன்னோடுதான்' - படத்தின் விமர்சன முறை அசத்திற்று.

திருவெண்ணெய் நல்லூர், நந்தன்பாலா.

◆ உறுத்தல்கள் சிறுகதையின் முடிவு கண்களில் நீரைத் தேக்கிவிட்டது. வளர்ப்பு முற்றோரின் ஆறுதலுக்காக எடுத்துக் கொண்ட வித்தியாசமான முயற்சி.

திருச்சி - 2, ஆர். எழிலன்.

◆ பாமரர்களும், பக்குவமற்றோரும் 'ஜெ'ய கோஷத்துடன் தங்கள் ஆதரவைக் காட்டலாம். படித்தவர்கள், விவரம் தெரிந்தவர்கள் ஆர்ப் பாட்டமின்றி அமைதியான முறையில் வோட் டுப் பெட்டி மூலமே தங்கள் ஆதரவைக் காட்டு வர். அப்போது தெரியும், உண்மையிலேயே யாருடைய அலை வீசியதென்று!

குன்னூர், ஆழ்வாரப்பன்.

◆ தி. மு. க.வில் தொண்டர்களிடம் உற்சாகம் இல்லையெனக் கூறி விட்டு இருக்கிறீர்கள். நாங்கள் தூக்கம், சாப்பாடு எல்லாம் மறந்து எம் தலைவர் கலைஞரின் ஆணைப்படி செயலாற்றி வருகின்றோம்.

சாமியார் பேட்டை, த. மதியழகன்.

◆ அ. தி. மு. க வேட்பாளர் பட்டியலில் 50 - 60 சதவீதத்திற்குமேல் புதியவர்களை, தொண்டர்க ளோடு தொடர்பில்லாத நபர்களை, தேர்தலுக் காகக் கட்சியில் உறுப்பினர்களாக்கிக் களத்தில் இறக்கியதின் காரணமாக அ. தி. மு. க.வில் பல இடங்களில் போட்டி வேட்பாளர்கள் களத்தில் இறங்கி இருக்க, தி. மு. க தலைவர் கருணாநிதி மட்டும் உட்கட்சிப் பூசலில் எழுந்த அலையைக் கண்டு பயப்படுவதாகச் சித்திரிப்பதற்குக் கார ணம் யாதோ!

திருச்சி, அ. அருள் சீலன்.

◆ பேரறிஞர் அண்ணா அவர்களோ, கலைஞர் அவர்களோ கடவுள் இல்லையென்று கூறியது இல்லை. திமுகவின் கொள்கை 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்பதாகும்.

கும்பகோணம், எஸ். சந்திரசேகர்.

◆ விவசாயப் பெருமக்களுக்கு இலவச மின் சாரம் போன்ற எண்ணற்ற நன்மைகளைச் செய்த கலைஞரின் செயலுக்குக் களங்கம் கற்பிக்கும் வகையில் 1972 ல் ஏதோ ஒரு சூழ்நிலையில் நடந்த அ ச ம் பா வி த் த் தை நினைவூட்டுவதில் விஷமத்தனம் நிழலாடுகிறது. கலைஞர் தலை மைப் பதவியில் இருந்து விலக வேண்டுமென்ற கருத்தை யாரோ கூறுவது போல் வெளியிட்டி ருக்கிறீர்கள். ஆனால் ஏழரைக் கோடி தமிழ் மக்களின் விடியலுக்காகப் புனிதப் பயணம் செய்யும் அந்த உதயசூரியனுக்கு ஓய்வு கொடுக்க, தமிழ்ச் சமுதாயம் தயாரில்லை!

சென்னை, செங்கைச் செல்வன்.

◆ தமிழ் நாடு ஏமாந்த நாடு அல்ல என்பதை, வரவிருக்கும் தேர்தல் நிரூபிக்கும். கலைஞர் கோட்டைக்குப் போவார்; ஜெயலலிதா ஆந்திரா விற்குப் போவார்.

குன்னூர் - 2, பா.மு. முபாரக்.

◆ கருணாநிதி சென்ற முறை நேர்மையான ஆட்சியை நடத்த மனப்பூர்வ மாகவே விரும்பி னார். முன்னாள் அ. இ. அ. தி. மு. க. அமைச் சர்கள் ஒருவர் மீது ஒருவர் வீசிய சேற்றிலேயே ஏராளமான ஊழல்கள் வெளிப்பட்டன. அவற் றை ஆதாரங்களுடன் அம்பலப்படுத்தியி ருந்தால், தி. மு. க வின் புகழ் ஓங்கியிருக்கும். ஆனால் இரண்டு இடைத்தேர்தல்களில் தோற்ற தும், அஞ்சி, ஊழல் விசாரணையை அப்படியே விட்டுவிட்டு, எம். ஜி. ஆர் புகழ்பாடி, அவரின் தொண்டர்களை ஈர்க்க முயன்றார். தி. மு. க தொண்டர்கள் குழப்பமடைந்தார்கள். "ஊழல் புரிந்தவர்களுக்கு லாபமும் கிடைக்கிறது. புக ழும் கிடைக்கிறது. நாம் மட்டும் ஏன் காய வேண்டும் ?" என்று எண்ணினார்கள். கருணா நிதியின் இந்தக் குழப்பமான, முரண்பாடான நிலையே தொண்டர்களின் சோர்வுக்குப் பெரி தும் காரணம்.

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

◆ "சுவரைக் காப்பாற்றிக் கொள்வது எப் படி?" என்ற கட்டுரையில், 'எந்த அரசியல் கட் சிக்காரனாவது, பின்னால் சுவருக்கு வெள்ளை அடித்துக் கொடுத்திருக்கிறானா' என்று கேட்கப் பட்டுள்ளது. கடந்த சட்டமன்றத் தேர்தலில் திரு வனந்தபுரம் சுவர்களில், பி. ஜே. பி வேட்பா ளர்கள் செய்த விளம்பரங்களைத் தேர்தல் முடிவு வெளியான மறுநாளே ஓர் இடம் பாக்கி இல்லாமல் வெள்ளையடித்துக் கொடுத்தார்கள்.

திருவனந்தபுரம், எஸ்.எஸ். மணி.

◆ 'அரசியல் பழசு; முகங்கள் புதுசு!' கட்டு ரையை ரொம்ப ரசித்துப் போய் எழுதியிருப்பீர் போலிருக்கிறது. அதனால்தான் 'முகங்கள்' 'முகங்ள்' ஆனதுகூட உமக்குத் தெரியாமல் போயிருக்கிறது.

அரூர், மு. மதிவாணன்.

சிரிக்க வையுங்கள் ;
சிங்கப்பூர் செல்லுங்கள் !

50

# கலைஞர் ஏன் தட்டிலேயே சாப்பிடுகிறார்?



நண்பர் வீட்டுத் திருமண விருந்தில் பரிமாறிக் கொண்டிருந்தவர், வரிசையாகச் சாம்பார் போட்டுக் கொண்டு வந்தார். எனக்குச் சாம்பார் ஊற்றிச் சென்று, திரும்ப வந்தவரிடம் நான் சொன்னேன்:

''சாம்பாரில் பரங்கிக்காய் சேர்க்காமல் போனது எவ்வளவு நல்லதாப் போச்சு!''

குழப்பமாய் அவர் என்னைப் பார்க்க, நான் காம்போடு முழுசாய் விழுந்திருந்த கத்தரிக்காய் ஒன்றை இலையிலிருந்து எடுத்துக் காட்டியதும் அனைவரும் கொல்லென்று சிரிக்க... சாப்பாட்டுப் பந்தி களை கட்டியது!

-- அ. இராசரத்தினம் , திருச்சி - 1.

* * * * *

''கலைஞர் எப்பவும் 'தட்டு'லேதான் சாப்பிடுவார், ஏன் தெரியுமா?''

''தெரியாதே?''

''அவருக்குத்தான் இலைன்னாலே பிடிக்காதே!''

-- எஸ். சுந்தரராஜ் , பாளையங்கோட்டை.

* * * * *

வேட்பாளர்: ''எங்கள் கட்சி ஆட்சிக்கு வந்தால், ஏழைகளை வருத்தும் லாட்டரியை ஒழித்து விடுவோம்!''

வாக்காளர்: ''அப்படிங்களா! அரிசிக்கு லாட்டரி, பருப்புக்கு லாட்டரி, சீனிக்கு லாட்டரி, தண்ணீருக்கு லாட்டரி போன்ற எல்லா லாட்டரிகளையும் ஒழிச்சிடுவீங்களா?''

--பி. வி. சீனிவாசன் , சென்னை - 28.

* * * * *

திருமணமான புதிதில் கணவன்: ''உன் நேற்றைய சமையல் பிரமாதமாக இருந்தது!''

மனைவி: ''அதை நேற்றுச் சொல்லாமல் இன்றைக்குச் சொல்றீங்களே!''

கணவன்: ''இன்றைய சமையலைச் சாப்பிட்டவுடன்தான் எனக்கே அது தெரிந்தது!''

--ஆர். ரகோத்தமன், சென்னை - 33.

* * * * *



இன்ஸ்பெக்டர்: ''தேவலையே! நீங்க திருடனா இருந்தாலும் உங்க பையனாவது நல்லாப் படிக்கட்டும்னு அவனைத் தவறாம ஸ்கூலுக்கு அனுப்பறீங்க, போலிருக்கே!''

திருடன்: ''ஆமாங்க! நான்தான் படிக்காம பிக்பாக்கெட் அடிக்கறது, சுவரேறிக் குதிக்கிறதுன்னு கஷ்டப்பட்டுக்கிட்டிருக்கேன். அவனாவது நல்லாப் படிச்சுக் கள்ளக் கையெழுத்துப் போடறது, பாங்க் ஃப்ராட் பண்றதுன்னு பெரிய அளவுல போகட்டுமேன்னுதான்!''

-- இரா. இராகவன் , மேல்மங்கலம் .

* * * * *

# பணநாயகம்

## ஆசிரியர் பக்கம் :

''நமது தரத்தைக் குறைத்துக் கொண்டு, தேர்தலில் வெற்றி பெறுவது ஒரு வெற்றி அல்ல'' என்றார் நேருஜி. இந்தக் கருத்தை ஆரம்ப வரிகளாகக் கொண்டு, நியூஸ் வீக் பத்திரிகை, ஒரு கட்டுரை வெளியிட்டிருக்கிறது - நமது தேர்தலைப் பற்றித் தான்!

''காங்கிரஸ் ஒன்றுதான் தேசியக் கட்சி; அதனால் மட்டுமே நிலையான ஆட்சி வழங்க முடியும் என்பதாகப் பிரசாரம் செய்யப்படுகிறது. ஒரு வேளை, இது உண்மையாகக் கூட இருக்கலாம். ஆனால், இந்தியாவின் கஜானா காலி என்பதுடன், 7,000 கோடி டாலர் அந்நியக் கடன்களைச் சுமந்து கொண்டிருக்கிறது இந்தியா. இதைச் சீராக்க என்ன திட்டம்? யாருக்கும் தெரியவில்லை!

''ஆனால், தேர்தலை வியாபாரமாக்க, அரசியல்வாதிகள் மட்டுமின்றித் தொழிலதிபர்களும் நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறார்கள்! எந்தச் சிறிய காரியத்தைத் தொழில் அல்லது வர்த்தகத் துறையில் செய்ய வேண்டுமென்றாலும் அதற்கு லைசென்ஸ் பெற வேண்டும். எனவே இப்போது, வர்த்தகர்களும் தொழிலதிபர்களும் தேர்தலில் பல்வேறு கட்சிகளுக்கு உதவி, முதலீடு செய்கிறார்கள். இந்தியாவில் தேர்தல் என்பது, நல்ல வியாபாரம்'' என்கிறது' பிரனே குப்தே என்பவர் எழுதியுள்ள அந்த நியூஸ்வீக் கட்டுரை. நமது பணநாயகத்தை இப்படி அம்பலப்படுத்த, ஓர் அமெரிக்கப் பத்திரிகை முன்வந்து, உலக அரங்கிலே நமக்குத் தலைகுனிவை ஏற்படுத்தி இருக்கிறது. என்றாலும் வார்த்தைக்கு வார்த்தை, இவை உண்மைகளே அல்லவா?

எல்லா அரசியல் தலைவர்களும் இன்று தனி விமானங்களில் பறக்கிறார்கள். வாஜ்பேயிக்கும் அத்வானிக்கும் கூட - பழைய மாடல் என்றாலும் - தனி விமானங்கள். நாளிதழ்களில் தரப்படும் பிரும்மாண்ட விளம்பரங்கள், எது பணக்காரக் கட்சி என்பதில், ஒன்றோடு ஒன்று போட்டி விடுவது போல் காணப்படுகின்றன. நேரடியாக நாம் பார்க்கா விட்டாலும் பெட்டி பெட்டியாகப் பணம் பட்டுவாடா ஆவது நமக்குத் தெரியும். எத்தனை கட் அவுட்கள்! எத்தனை கார்கள்! எத்தனை பெட்ரோல்! என்ன பயங்கரச் செலவு! கடைசியில் ஒவ்வொரு வேட்பாளரும் கணக்குக் காட்டப் போவது என்னவோ ஐயாயிரம் அல்லது ஆறாயிரம் செலவழித்ததாக! இதிலெல்லாம் ஜனநாயகம் எங்கே இருக்கிறது? எங்கும் பணநாயகத்தின் திருவிளையாடல்தான்!

தேர்தல் கமிஷன் தலைவர் சேஷன் கேட்கிறார்: ''எங்களுக்கு ஒரு விமானம் கொடுங்கள். தேவைப்படும் இடத்துக்குச் சட்டென்று பறந்து போய், உண்மை நிலவரத்தை ஆராய்ந்து, தக்க நடவடிக்கை எடுக்க வசதியாக இருக்கும்'' என்று. நியாயமான இந்தக் கோரிக்கையை ஏற்று, அவருக்கு ஒரு விமானம் ஒதுக்க அரசு தயாராக இல்லை! சுப்பிரமணிய சுவாமி குவெய்த் சென்று வரத் தனி விமானம் தருகிறது! யாரிடம் சொல்லி அழ?

ராஜீவ் காந்தியைச் ''சரித்திர புருஷர்'' என்று வர்ணிக்கிறது, நியூஸ்வீக் கட்டுரை. ''நேரு, காந்தி போன்று தூய்மை காரணமாகச் சரித்திர புருஷரானவர் அல்ல; போஃபோர்ஸ், நீர்மூழ்கிக் கப்பல் பேரங்கள் காரணமாகச் சரித்திரத்தில் இடம் பெறுகிறவர்'' என்கிறது! ''சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படாததாலேயே, ஒருவர் குற்றமற்றவராகி விட மாட்டார் என்பதைக் காங்கிரஸ் கட்சி உணர வேண்டும்'' என்று மேலும் கூறுகிறது அந்தக் கட்டுரை. ஆனால் பரிதாபம், காங்கிரஸுக்கு நேருவின் பேரனை விட்டால் வேறு கதி இல்லை!

''லஞ்ச ஊழல் எங்குதான் இல்லை? அது உலகம் முழுவதும் வியாபித்திருக்கும் ஒரு விஷயம்'' என்று, இந்திரா காந்தி ஒரு முறை குறிப்பிட்டார். ''உண்மைதான்'' என்கிறது நியூஸ்வீக். ''ஆனால் மேற்கத்திய ஜனநாயக நாடுகளில் நிலவும் லஞ்ச ஊழலால், அவற்றின் முன்னேற்றம் தடைப்படுவதில்லை. இந்தியாவிலோ லஞ்சம் என்பது அரிசிச் சோறு போலப் பிரதான உணவு! டெலிஃபோனா, மின்சாரமா, பாலா, ரேஷன் கார்டா, பிறப்பு அல்லது மரணச் சான்றிதழா? எது வேண்டுமானாலும் 'சம்திங்' தந்தாக வேண்டும் என்ற இந்த நிலை, உலகின் வேறு எந்த நாட்டிலும் காணப்படாத, இந்தியாவுக்கே உரிய தனிப் பெருமை! இந்தியாவில் இந்த லஞ்சமே பணவீக்கம் உருவாகவும் ஒரு காரணமாகிறது!''

தீர்வு என்ன? ''மத்தியதர மக்கள், ஓரளவு படித்தவர்கள் பொங்கி எழுந்து, ஒரு புதிய அரசியல் இயக்கத்தைத் தோற்றுவிப்பது தான் வழி' என்கிறது நியூஸ்வீக். நடக்குமா? நியூஸ்வீக்குக்கு நம்பிக்கை இல்லை. நமக்கும்தான். காரணம், இன்றைய அரசியல்வாதியின் பிரித்தாளும் தந்திரம் வெற்றி பெற்று வருவதுதான்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: வி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: பிரஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. தொலைபேசி: ஆசிரியர் குழு அலுவலகம்: 2344145; சர்க்குலேஷன் மானேஜர்: 2344190; விளம்பரம் — சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/-; விமானத் தபால்: ரூ. 350/-.

# பயனுள்ள பயிற்சி முறை

## உங்களுக்காக...

நீங்கள் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா?
ஓரளவு கல்வித்தகுதியிருந்தும், உங்களால் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசமுடியவில்லையா?

ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மையினால் உங்களது முன்னேற்றம் தடைபடுகிறதா? மற்றவர்கள் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறதா?

ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற ஆர்வத்தில் பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றம் ஏற்படவில்லையே என்று வேதனைப்படுகிறீர்களா?
கவலையை விடுங்கள்.....

இதோ ஒரு பயனுள்ள பயிற்சி முறை உங்களுக்காக.
தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற்கொண்டால் தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாடவும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதவும் உங்களால் முடியும்.
வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் நீங்கள் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.
நேர்முகப்பயிற்சி பெற விரும்புவோருக்கு தனிவகுப்புகள் நடத்தப்படுகின்றன.
இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெற வேண்டும் என்ற உங்களதுவிருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்.
இப்பயிற்சியில் சேருவதற்கான விண்ணப்ப மனுவையும், மற்ற விவரங்களையும் உடனே அனுப்பி வைக்கிறோம்.

ஆங்கிலத்தில் பேச வேண்டும், வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் நிறைவேற இன்றே உங்களது முயற்சி துவங்கட்டும்.
நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

---

விவேகானந்தா கல்வி நிலையம்
தபால் பெட்டி எண். 4986
9, நடேசன் தெரு, தி.நகர்,
சென்னை — 600 017.
தொலைபேசி எண். 44 12 16

---

**நமது கல்வி நிலையத்திற்கு சென்னையைத் தவிர. வேறு ஊர்களில் கிளைகள் எதுவும் கிடையாது.**

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka